# தஞ்சை ஸங்கீத வித்யா மஹாஜன சங்கத்தின் முதலாவது வருஷத்திய ரிபோர்ட்.

**1913-ம் ௵ ஆகஸ்டு௴ 9-ம் ௳.**

கருணாநிதியின் கிருபா கடாட்சத்தால் இச்சங்கமானது அதின் முதலாவது வருஷ உற்சவத்தைக் கொண்டாடும் சிலாக்கியத்தைப் பெற்றிருக்கிறது. கடவுளுக்கே மகிமை யுண்டாவதாக. யாவருக்கும் மங்கள முண்டாவதாக.

சுமார் 18 மாதங்களுக்குமுன் இச்சங்கத்தை ஆதியில் ஸ்தாபித்தவர்களும் அச்சங்கத்தின் பிரசிடெண்டுமாகிய ராவ் ஸாஹேப் M. ஆபிரகாம் பண்டிதரவர்களின் வேண்டுகோளால் சென்ற வருஷம் பிப்ரவரி௴ 14-ம்தேதியில் ஒரு சிறு மீற்றிங் கருணாநிதி சங்கீத மஹாலில் கூடினது. அதில் எட்டுபேர் ஹாஜராயிருந்தார்கள். அவர்கள் யாரெனில் :—(i) பிரசிடெண்டவர்கள், (ii) மகா-ள-ள-ஸ்ரீ பஞ்சாபிகேச பாகவதரவர்கள், (iii) மகா-ள-ள-ஸ்ரீ முத்தையா பாகவதரவர்கள், (iv) மகா-ள-ள-ஸ்ரீ கோனேரிராஜபுரம் வைத்தினாதய்யரவர்கள், (v) மகா-ள-ள-ஸ்ரீ வையை R. சுப்பிரமணிய ஐய்யரவர்கள், (vi) மகா-ள-ள-ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்கள், (vii) மகா-ள-ள-ஸ்ரீ N. P. சுப்பிரமணிய ஐயர் அவர்கள், (viii) மகா-ள-ள-ஸ்ரீ A. G. பிச்சைமுத்து அவர்கள்.

அச்சமயம் இந்திய ஸங்கீத அபிவிர்த்தியில் தனக்கிருந்த அவாவைப் பிரசிடெண்டவர்கள் எடுத்துச் சொன்னதின்பேரில், அதை உத்தேசித்து தென்னிந்தியாவுக்கென்று, "தென்னிந்தியாவின் ஸங்கீத களஞ்சியம்" என்ற பெரும் பெயரை அடைந்த இந்தத் தஞ்சைமாநகரில், "ஸங்கீத வித்யா மஹாஜன ஸங்கம்" ஒன்றை ஸ்தாபிக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. அப்படியே பிரசிடெண்டு, செக்ரிடெரி, ரிஸெப்ஷென் கமிட்டி சேர்மென், ரிஸெப்ஷென் கமிட்டி செக்ரிடெரி முதலியவர்களால் ஆயுள்ள "காரிய நிர்வாக ஸபை" ஒன்று நியமிக்கப்பட்டு, சங்கத்தின் முதலாவது மீற்றிங் 1912-ம் ௵ மே௴ 27-ம் ௳ யன்று இந்த இடத்தில் கூடினது.

---

## ஸங்கத்தின் நோக்கம்.

இச்சங்கத்தின் முக்கிய நோக்கங்கள் எவையெனில் :—

(i) இந்திய ஸங்கீத சாஸ்திர அறிவை விர்த்தி செய்தல்.

(ii) நம் இந்திய ஸங்கீதத்தில் மறைந்து கிடக்கும் ரஹஸ்யங்களைப் ப்ரசங்கங்கள் மூலமாய்ப் பிரசித்தப்படுத்துதல்.

(iii) பழமையான ஸங்கீத நூல்களையும் உருப்படி முதலியவைகளையும் சேகரித்துப் பிரசுரப்படுத்துதல்.

(iv) நம் கர்நாடக ராகங்கள் ஒவ்வொன்றையும் பரிசோதித்து யாவரும் அறியும்படி பிரசுரப்படுத்துதல்.

(v) நம் கர்நாடக ராகங்களையும் பாடும் முறைகளையும் தகுந்த வித்வான்களைக் கொண்டு பாடிக் காட்டுதல்.

(vi) ஸங்கீத சம்பந்தமான புஸ்தகங்கள், நூதன அபிப்பிராயங்கள், பத்திரிகைகள் முதலியவற்றை அரங்கேற்றுதல்.

(vii) ஸங்கீதசாலை ஒன்று ஸ்தாபித்து, கர்நாடக ஸங்கீதம் சுத்தமாய் வாசிக்க, பாடத்தகுந்த வித்வான்களைக்கொண்டு வாத்தியங்களும் பாட்டுகளும் கற்பித்தல்.

viii) ஸங்கீதம் கற்போருடைய வேண்டுகோளின்பேரில் அவர்களைத் தகுந்த வித்வான்களைக்கொண்டு பரீக்ஷித்து யோக்கியதா பத்திரம் கொடுத்தல்.

(ix) சங்கத்தாருடைய விருப்பத்தின்படி தகுந்த வித்வான்களென்று யாரார் சங்கத்தால் சிபார்சு செய்யப்படுவார்களோ அவர்களுக்கு வருஷாந்தர உற்சவத்தில் அவர்கள் திறமைக்குத் தகுந்த மரியாதைப் பெயர்கள், இனும் முதலியவை கொடுத்தல்.

---

## ஸங்கத்தின் ஆதரிப்பு.

நாளது வரையில் இச்சங்கமானது நமது பிரசிடென்டவர்களின் சொந்தச் செலவிலேயே நடந்தேறி வருகிறது. இதற்காக ஸங்கத்தின் அங்கத்தினர் யாவரும் அவர்களுக்கு நன்றியறிதலான வந்தனம் அளிக்கிறோம். ஆனால் இனிமேலும் அவர்கள் உதவியை நாம் எதிர்பார்ப்பது நியாயமல்ல. ஆகையால் அதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய சப்-கமிட்டி ஒன்று நியமித்திருக்கிறது. கூடிய சீக்கிரம் அதைப்பற்றிய விபரம் தெரிவிக்கப் படும்.

ஹரிகேசவ நல்லூர் பிரம்மஸ்ரீ முத்தையா பாகவதரவர்கள் வருஷத்திற் கொருதடவை தாம் நடத்தும் ஓர் கதையின் வரும்படியை ஸங்கத்திற்கு கொடுப்பதாக வாக்களித்திருக்கிறார். இதற்காக நாங்கள் நன்றியறிதலுள்ளவர்களாயிருக்கிறோம்.

அநேக கனவான்கள் போஷகர்களாகவும் மெம்பர்களாகவும் இருக்கவேண்டுமென்று விரும்பி கடிதங்கள் எழுதியிருக்கிறார்கள்.

---

## ஸங்கத்தின் போஷகர்கள்.

தென்னிந்தியாவில் இந்திய ஸங்கீத அபிவிர்த்தியில் சிரத்தை எடுத்துக்கொள்ளும் அநேக கனவான்கள் இதற்கு போஷகராயிருப்பதாக வாக்குக் கொடுத்திருக்கிறார்கள். அவர்கள் இன்னாரெனில் :—

1. H. H. மகாராஜா ஹோல்கார், இண்டூர்.
2. H. H. சேதுபதி மகாராஜா, இராமநாதபுரம்.
3. ஹானரபிள் ராவ் பஹதூர் N. கிருஷ்ணசாமி ஐயங்கார், B.A., B.L.
4. மகா-ா-ா-ஸ்ரீ சாமிநாத விஜயதேவர் அவர்கள், ஜமீன்தார்.
5. ,, V. P. மாதவராவ் அவர்கள், C. I. E.

6. மகா-ா-ா-ஸ்ரீ ராவ் பஹதூர் A. அண்ணுசாமி தேவர் அவர்கள்.
7. ,, ,, C. நாகோஜிராவ் அவர்கள்.
8. ,, V. அப்பாசாமி வாண்டையார் அவர்கள், பூண்டி, தஞ்சாவூர்.
9. ,, V. கோபாலசாமி ரெகுநாத ராஜாளியார் அவர்கள்.
10. ,, ராவ் ஸாஹேப் J. சுநாம்பட், ஹடகல்லி, பல்லாரி.
11. ,, ராதாகிருஷ்ணய்யர் அவர்கள், B. A.
12. ,, டாக்டர் T. N. கோவிந்த ஐயர் அவர்கள், M. B. C. M.
13. ,, சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரியாரவர்கள்.
14. ,, ஆதிநாராயணய்யர் அவர்கள், பண்ணையார், பாலூர்.
15. ,, வெங்கடசுப்பையர் அவர்கள், B. A., B. L.
16. ,, T. D. சாமிநாதய்யர் அவர்கள்.
17. ,, T. சாம்பமூர்த்திராவ் அவர்கள், B. A., B. L.

---

## ஸங்கத்தின் காரிய நிர்வாக சபையார்.

இச்சங்கம் ஆரம்பித்த காலமுதல் அடியில்வரும் வித்வான்களும், கனவான்களும் சங்கத்தின் நடவடிக்கைகளை யெல்லாம் வெகு உற்சாகத்தோடும் பூரண விசுவாசத்தோடும் நடத்தி வந்திருக்கிறார்கள். அவர்கள் யாரெனில் :—

மகா-ா-ா-ஸ்ரீ ராவ் ஸாஹேப் M. ஆபிரகாம் பண்டிதரவர்கள்.
,, N. P. சுப்பிரமணிய ஐயர் அவர்கள்.
,, A. G. பிச்சைமுத்து அவர்கள்.
,, L. முத்தையா பாகவதர் அவர்கள்.
,, S. சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்கள்.
,, T. A. பஞ்சாபகேச பாகவதர் அவர்கள்.

---

## ஸங்கத்தின் மீற்றிங்குகள்.

வருஷத்தில் 4 ஜனரல் மீற்றிங்குகள் நடத்தப்படவேண்டுமென்பது காரியநிர்வாக சபையாரின் அபிப்பிராயம். ஆனாலும் நமது பிரசிடெண்ட் அவர்களின் சொற்ப தேக அசௌக்கியத்தால் 3 ஜெனரல் மீற்றிங்குகளும், 3 சப்-கமிட்டி மீற்றிங்குகளும் மாத்திரம் நடந்தேறியது. ஜெனரல் மீற்றிங்குகள் 1912-ம்ஷு மேமீ 27-ம்உயிலும், ஆகஸ்டுமீ 31-ம்உயிலும், 1913-ம்ஷு ஏப்பிரல்மீ 19-ம்தேதியிலும் நடந்தன. கூடின ஒவ்வொரு ஜெனரல் மீற்றிங்குக்கும் முன்னதாக காரிய நிர்வாக சபையாரின் சப்-கமிட்டி மீற்றிங் நடந்தது.

---

## ஸங்கத்தில் ஆலோசிக்கப்பட்ட விஷயங்கள்.

அடியிற்கண்ட விஷயங்களைப்பற்றி பின்வரும் கனவான்கள் உபந்நியாஸம் வாசித்திருக்கிறார்கள் :—

(i) "ஸங்கீதத்தின் உயர்வும், உபயோகமும்" என்பதைப்பற்றி M. R. Ry. A. G. பிச்சைமுத்து அவர்களும், பிர்ம்மஸ்ரீ வையச்சேரி சுப்பிரமணியய்யரவர்களும்.

(ii) ஸங்கீதம் பாடும் முறை, கேட்கும் முறை, ஸங்கீதம் போதனு முறை, அப்யாச முறை, கர்நாடக ஸங்கீதத்தின் தற்கால நிலைமை என்பவைகளைப்பற்றி பிர்ம்மஸ்ரீ பஞ்சாபிகேச பாகவதரவர்கள், பிர்ம்மஸ்ரீ முத்தையா பாகவதரவர்கள், பிர்ம்மஸ்ரீ வீணை வெங்கிடாசலையைரவர்கள், A. P. கணேசய்யர் அவர்கள் முதலியவர்கள்.

(iii) "ஸங்கீதமும் ஸாஹித்யமும்" என்பதைப்பற்றி பிர்ம்மஸ்ரீ ஸப்தரிஷி பாகவதர் அவர்கள்.

(iv) "நாதபிர்மம், நாதோபாஸனை" என்பவைகளைப்பற்றி மகா-ா-ா-ஸ்ரீ P. V. கிருஷ்ணசாமி அய்யர் அவர்கள்.

(v) "இந்திய ஸங்கீத ரஹஸ்யம்" என்பதைப்பற்றி மகா-ா-ா-ஸ்ரீ A. P. கணேச ஐயரவர்கள்.

(vi) "ஸங்கீத சாஸ்திரம்" என்பதைப்பற்றி மகா-ா-ா-ஸ்ரீ P. R. சுந்தரம் ஐயர் அவர்கள்.

(vii) "மாயாமாளவ ராகம்" என்பதைப்பற்றி மகா-ா-ா-ஸ்ரீ திருமலை நாயுடு அவர்கள், M. R. A. S.

(viii) "ஸங்கீதம் பாடும் முறை" என்பதைப்பற்றி மகா-ா-ா-ஸ்ரீ A. P. கணேச ஐயரவர்களும், மகா-ா-ா-ஸ்ரீ வெங்கிடராமய்யர் அவர்களும்.

(ix) "வீணை அப்பியாஸ முறை" என்பதைப்பற்றி விஜயநகரம் ஸமஸ்தான வித்வான் வீணை வெங்கடரமணதாஸ் அவர்கள்.

(x) "இந்திய ஸங்கீத அப்பியாஸ முறை" யைப்பற்றி Mr. T. C. R. Johannas அவர்கள்.

(xi) "நாத மகிமை" யைப்பற்றி சிதம்பரம் ரெகுநாதசுவாமிகள் அவர்கள்.

(xii) "வீணையின் விசேஷமும் உயர்வும்" என்பதைப்பற்றி சிதம்பரம் வீணை அப்பாக் கண்ணு பிள்ளை அவர்கள்.

(xiii) "துவாவிம்சதி சுருதி" யைப்பற்றி பல வித்வான்கள் வெகு சிரத்தையோடும் ஸவிஸ்தாரமாயும் பேசினார்கள். சிலர் வீணையைக்கொண்டும், மற்ற வாத்தியங்களின் மூலமாயும் தங்கள் அபிப்பிராயத்தை வெளியிட்டார்கள். என்றாலும் நம் கர்நாடக ஸங்கீதத்தில் வழங்கிவரும் சுருதி நிச்சயத்துக்கு வருவது லேசானகாரியமல்ல. அப்படி யிருந்தபோதிலும் வித்வான்கள் சீக்கிரம் அதைப்பற்றி ஒரு நிச்சயத்துக்கு வருவார்களென்று நம்புகிறோம்.

அடியில் சொல்லப்பட்ட வித்வான்கள் சுருதியைப்பற்றி வெகு பிரயாசத்தோடு தங்கள் அபிப்பிராயத்தை வெளியிட்டார்கள் :—

பிரம்மஸ்ரீ பஞ்சாபிகேச பாகவதர் அவர்கள், பிரம்மஸ்ரீ பிரதாப ராமஸ்வாமி பாகவதர் அவர்கள், பிரம்மஸ்ரீ ஸப்தரிஷி பாகவதர் அவர்கள், பிரம்மஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரியார் அவர்கள், M. R. Ry. H. P. கிருஷ்ணராவ் அவர்கள் B. A., (Editor of *The Indian Musical Journal*), M. R. Ry. P. R. சுந்தரம் ஐயரவர்கள், B. A., L. T., பிரம்மஸ்ரீ அப்பாசாமி ஐயரவர்கள், பிரம்மஸ்ரீ ராதாகிருஷ்ண பாகவதரவர்கள் முதலியவர்கள்.

(xiv) நாட்டை, மாயாமாளவம், சங்கராபரணம், என்னும் இராகங்களைப்பற்றிய ஆராய்ச்சி. இவ்விராகங்களில் ஆரோகண அவரோகணங்கள் எப்படி இருக்கு மென்பதைப்பற்றியும், ராக சஞ்சாரம் எப்படி யிருக்குமென்பதைப் பற்றியும், பூரணமான விசாரணை நடந்து அநேக வித்வான்கள் பாடிக் காட்டியும், பிடில், வீணை முதலிய வாத்தியங்களில் வாசித்துக் காண்பித்தும் கடைசியில் எல்லா வித்வான்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட முடிவான தீர்மானங்கள் ரெக்கார்ட் செய்யப்பட்டிருக்கிறது.

---

## 1912-ம் வருஷம் மேயீ 27-ம்வ

### முதலாவது மீற்றிங்கிற்கு ஹாஜரானவர்கள் :—

1. மகா-ா-ா-ஸ்ரீ ராவ் ஸாஹேப் M. ஆபிரகாம் பண்டிதரவர்கள், பிரசிடென்ட்.
2. ,, சாமிநாத விஜய தேவர் அவர்கள், ஜமீன்தார், பாப்பாநாடு.
3. ,, ராவ் ஸாஹேப் திரவிய நாடாரவர்கள், B. A., டிப்டி கலெக்டர். தஞ்சாவூர்.
4. ,, ராவ் பகதூர் K. S. சீனிவாசம் பிள்ளை அவர்கள், ,,
5. ,, V. கோபாலசாமி ரெகுநாத ராஜாளியார் அவர்கள், ஹரித்வாரமங்கலம், ,,
6. ,, P. V. கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள், B. A., B. L., ,,
7. ,, N. K. ராமஸ்வாமி ஐயர் அவர்கள், B. A., B. L., ,,
8. ,, K. நடராஜ ஐயர் அவர்கள், B. A., B. L., ,,
9. ,, P. S. சுந்தரம் ஐயர் அவர்கள், B. A., L. T., கோயமுத்தூர்.
10. ,, A. P. கணேச ஐயர் அவர்கள், பாடசாலை ஸூபர்வைஸர், மைலாப்பூர்.
11. ,, ஸபேசய்யர் அவர்கள், மாயவரம்.
12. ,, வீணை வைத்திநாத ஐயர் அவர்கள், மாயவரம்.
13. ,, சேஷையர் அவர்கள், மாயவரம்.
14. ,, பிடில் பஞ்சாபிகேச பாகவதர் அவர்கள், தஞ்சாவூர்.
15. ,, S. V. நடராஜயர் அவர்கள், சங்காலிபுரம், ,,
16. ,, L. முத்தையா பாகவதர் அவர்கள், ஹரிகேசவநல்லூர், திருநெல்வேலி.
17. ,, பிரதாப ராமஸ்வாமி பாகவதர் அவர்கள், பூவனூர், தஞ்சாவூர் ஜில்லா.
18. ,, R. சுப்பிரமணிய ஐயர் அவர்கள், தமிழ் பண்டிதர், செண்ட் பீட்டர்ஸ் ஹை ஸ்கூல், தஞ்சாவூர்.
19. ,, ஸப்தரிஷி சாஸ்திரிகள் அவர்கள், சம்ஸ்கிருத பண்டிதர், கல்யாணசுந்திரம் ஹைஸ்கூல், தஞ்சாவூர்.
20. ,, கோவிந்தசாமி பாகவதர் அவர்கள், ,,
21. ,, K. V. சீனிவாஸ ஐயங்கார் அவர்கள், திருச்சிறுப்பள்ளி.
22. ,, V. கிருஷ்ணமாச்சாரியார் அவர்கள், மதராஸ்.
23. ,, T. சுப்பிரமணியம் அவர்கள், ,,
24. ,, K. ராமச்சந்திர ஐயர் அவர்கள், கீவலூர், தஞ்சாவூர்.
25. ,, வீணை வெங்கிடாசல ஐயர் அவர்கள், ,,
26. ,, அப்பாஸாமி ஐயர் அவர்கள், வையச்சேரி, ,,
27. ,, ராதாகிருஷ்ண பாகவதர் அவர்கள், கும்பகோணம்.
28. ,, ஸாமிநாத ஐயர் அவர்கள், பழமானேரி, தஞ்சாவூர்.

29. மகா-ா-ா-ஸ்ரீ S. சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்கள், ஸம்ஸ்கிருத பண்டிதர், கல்யாணசுந்திரம் ஹைஸ்கூல், தஞ்சாவூர்
30. ,, ஸ்வாமிதாஸ் ஹேஸ்டிங்ஸ் அவர்கள், விஜயபுரம். ,,
31. ,, A. வெங்கடசுப்பிரமணிய ஐயர் அவர்கள், ,,
32. ,, மிருதங்கம் சாமி ஐயர் அவர்கள், ,,
33. ,, O. N. அப்பாஸாமி ஐயர் அவர்கள், ,,
34. ,, ஜெகன்னாத பட்டோஸ்வாமி அவர்கள், ,,
35. ,, ஸ்வாமிநாத ஐயர் அவர்கள், ,,
36. ,, சாமியாபிள்ளை அவர்கள், ,,
37. ,, ஸாமிநாத ஐயர் அவர்கள், உமையாள்புரம், ,,
38. ,, விசுவநாத சாஸ்திரிகள் அவர்கள், ,,
39. ,, நடேச சாஸ்திரிகள் அவர்கள், ,,
40. ,, சாமா சாஸ்திரிகள் அவர்கள், ,,
41. ,, பிடில் சுப்பிரமணிய ஐயர் அவர்கள், ,,
42. ,, N. P. சுப்பிரமணிய ஐயர் அவர்கள், ,,
43. ,, A. G. பிச்சைமுத்து பிள்ளை அவர்கள், B. A., L. T., ஹெட்மாஸ்டர், செண்ட் பீட்டர்ஸ் ஹைஸ்கூல், தஞ்சாவூர். (செக்ரிடேரி).

---

1912-ம் ஞு ஆகஸ்டு 31-ல

இரண்டாவது மீற்றிங்கிற்கு ஹாஜரானவர்கள் :—

1. மகா-ா-ா-ஸ்ரீ ராவ் ஸாஹேப் M. ஆபிரகாம் பண்டிதரவர்கள், (பிரசிடேன்ட்).
2. ,, T. ஸாம்பமூர்த்தி ராயர் அவர்கள், B. A., B. L.
3. ,, P. V. கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள், B. A., B. L.
4. ,, P. V. நாகநாத சாஸ்திரிகளவர்கள், B. A., B. L.
5. ,, S. வெங்கடசுப்பையர் அவர்கள், B. A., B. L.
6. ,, Y. V. சீனிவாஸ ஐயர் அவர்கள்.
7. ,, V. வாமன ராவ் அவர்கள்.
8. ,, E. சூரியநாராயண ஐயர் அவர்கள், B. A., B. L.
9. ,, S. இராமசேஷ ஐயர் அவர்கள், B. A., B. L.
10. ,, P. V. மஹாலிங்க ஐயர் அவர்கள், B. A., B. L.
11. ,, பஞ்சாபிகேச பாகவதர் அவர்கள், தஞ்சாவூர்.
12. ,, அப்பாஸாமி ஐயர் அவர்கள், வையச்சேரி.
13. ,, வீணை வெங்கடரமணதாஸ் அவர்கள், ஸமஸ்தான வித்வான், விஜயநகரம்.
14. ,, பழமானேரி ஸாமிநாத ஐயர் அவர்கள், தஞ்சாவூர்.
15. ,, பிரதாப ராமஸ்வாமி பாகவதர் அவர்கள், பூவனூர், தஞ்சாவூர்.
16. ,, வீணை வெங்கடாசல ஐயர் அவர்கள், ,,
17. ,, பிடில் நாராயணஸாமி ஐயர் அவர்கள், ,,
18. ,, ஸப்தரிஷி சாஸ்திரிகள் அவர்கள், ,,
19. ,, வீணை இராமஸ்வாமி ஐயர் அவர்கள், ,,

20. மகா-ா-ா-ஸ்ரீ இராதாகிருஷ்ண பாகவதர் அவர்கள், கும்பகோணம்.
21. ,, P. S. சுந்தரம் ஐயர் அவர்கள், B. A., L. T., கோயமுத்தூர்.
22. ,, A. P. கணேச ஐயர் அவர்கள், மதராஸ்.
23. ,, S. சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்கள், தஞ்சாவூர்.
24. ,, வையை சுப்பிரமணிய ஐயர் அவர்கள், ,,
25. ,, வித்வான் அரசஞ் ஷண்முகம் பிள்ளை அவர்கள், சோழவந்தான்.
26. ,, சாமா சாஸ்திரிகள் அவர்கள், தஞ்சாவூர்.
27. ,, துரையப்ப ஐயர் அவர்கள், ,,
28. ,, U. S. சேஷையர் அவர்கள், ,,
29. ,, சேஷ பாகவதர் அவர்கள், ,,
30. ,, இராஜகோபால ஐயர் அவர்கள், ,,
31. ,, சாமியா பிள்ளை அவர்கள், ,,
32. ,, பத்மநாப நாயுடு அவர்கள், ,,
33. ,, R. சுந்தரம் ஐயர் அவர்கள், B. A., L. T., தஞ்சாவூர்.
34. ,, S. A. இஸ்ரவேல் பிள்ளை அவர்கள், B. A., L. T., தஞ்சாவூர்.
35. ,, J. B. ஞானவொளிவு அவர்கள், B. A., L. T., ,,
36. ,, C. பால் அவர்கள், B. A., ,,
37. ,, T. S. சுந்தரம் ஐயர் அவர்கள், ,,
38. ,, பவானிராவ் ஸாஹேப் அவர்கள், ,,
39. ,, சேதுராம பாரதியார் அவர்கள், ,,
40. ,, உலகநாத பிள்ளை அவர்கள், ,,
41. ,, சுந்திரராஜ ஸ்வாமிகள் *alias* T. C. R. Johannas, பிடில் வித்வான், மதராஸ்.
42. ,, N. P. சுப்பிரமணிய ஐயர் அவர்கள், M.R.A.S. ஜாயின்ட்-செக்ரிடெரி.
43. ,, A. G. பிச்சைமுத்து அவர்கள், B. A., L. T., (செக்ரிடெரி).

---

1913-ம் வருஷம் ஏப்பிரல்மீ 19-ம் வ

மூன்றாவது மீற்றிங்கிற்கு ஹாஜரானவர்கள் :—

1. மகா-ா-ா-ஸ்ரீ ராவ் சாஹேப் M. ஆபிரகாம் பண்டிதரவர்கள், (பிரசிடேண்ட்).
2. ,, V. P. மல்லாரி ராவ் அவர்கள்.
3. ,, சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்கள்.
4. ,, சுப்பிரமணிய ஐயர் அவர்கள்.
5. ,, சேதுராம பாரதியார் அவர்கள்.
6. ,, வீணை வெங்கிடாசலம் ஐயர் அவர்கள்.
7. ,, P. V. கிருஷ்ணசாமி ஐயர் அவர்கள், B. A., B. L.
8. ,, A. P. கணேச ஐயர் அவர்கள், மைலாப்பூர், மதராஸ்.
9. ,, H. P. கிருஷ்ணராவ் அவர்கள், B. A., மைசூர்.
10. ,, வீணை வெங்கடரமணதாஸ் அவர்கள், விஜயநகரம் ஸமஸ்தானம்.
11. ,, K. நடராஜன் அவர்கள், B. A., B. L.
12. ,, T. R. ஸ்ரீனிவாஸ ஐயங்கார் அவர்கள், B. A., L. T., M. R. A.S.
13. ,, R. சுந்தரம் ஐயரவர்கள், B. A., L. T.

14. மகா-ா-ா-ஸ்ரீ ஸபேச ஐயர் அவர்கள், ஸங்கீத வித்வான், மதராஸ்.
15. ,, வெங்கடராம சாஸ்திரிகள் அவர்கள்.
16. ,, ஸாம்ப பரமேச்வர ஐயர் அவர்கள்.
17. ,, அப்பாஸாமி ஐயர் அவர்கள், வையைச்சேரி.
18. ,, M. P. துரைஸாமி ஐயர் அவர்கள்.
19. ,, J. சுந்திரராஜு ஸ்வாமிகள் *alias* T. C. R. ஜோஹானஸ் அவர்கள், பிடில் வித்வான், மதராஸ்.
20. ,, K. பிரஹதீசன் அவர்கள், B. A.
21. ,, D. சௌரிராய பிள்ளை அவர்கள், M. R. A. S.
22. ,, பிரதாப ராமஸ்வாமி பாகவதர் அவர்கள்.
23. ,, சாமியா பிள்ளை அவர்கள்.
24. ,, ஜெகன்னாத பட்டோஸ்வாமி அவர்கள்.
25. ,, ஸாது கணபதி சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்கள், திருவையார்.
26. ,, ஸங்கீதம் ராமச்சந்திர ஐயர் அவர்கள், உக்கடை.
27. ,, T. V. பஞ்சாபிகேச ஐயர் அவர்கள், B. A., B. L.
28. ,, T. A. கணபதி ஐயர் அவர்கள்.
29. ,, P. V. மஹாலிங்க ஐயர் அவர்கள், B. A., B. L.
30. ,, S. V. இரங்கஸாமி ஐயங்கார் அவர்கள், மதராஸ்.
31. ,, T. S. சுப்பிரமணிய ஐயர் அவர்கள், திருத்துரைப்பூண்டி.
32. ,, Dr. புருஷோத்தம முதலியார் அவர்கள், B. A., M. B. C. M.
33. ,, கிறிஸ்தியான் பால் நாடார் அவர்கள், B. A.
34. ,, N. P. சுப்பிரமணிய ஐயர் அவர்கள்.
35. ,, இரங்கநாத ஸ்வாமிகள், சிதம்பரம்.
36. ,, வீணை அப்பாகண்ணு பிள்ளை அவர்கள், சிதம்பரம்.
37. ,, A. G. பிச்சைமுத்து அவர்கள், B. A., L. T., (செக்ரிடேரி).

---

## மீற்றிங்குகளுக்கு ஹாஜரானவர்கள்.

ஒவ்வொரு மீற்றிங்குக்கும் சுமார் 40 வித்வான்களுக்குக் குறையாமல் ஹாஜராயிருந்தார்கள். அவர்களில் சிலர் வெகு தூரமான இடங்களிலிருந்து தங்கள் ச்ரமத்தையும் பொருள் செலவையும் பாராமல் வந்து விஜயம் செய்ததானது ஸங்கீதத்தில் அவர்களுக்குள்ள அபிமானத்தைக் காட்டுகிறதாயிருக்கிறது. அவர்களெல்லாருக்கும் விசேஷமாக விஜய நகரம் ஸமஸ்தான வித்வான் வீணை வெங்கடரமணதாஸ் பந்துலு அவர்கள், சென்னப்பட்டணம் பிரம்மஸ்ரீ ஸபேசய்யரவர்கள், மைலாப்பூர் மகா-ா-ா-ஸ்ரீ A. P. கணேச ஐயர் அவர்கள், மைசூர் H. P. கிருஷ்ணராவ் அவர்கள், B. A., கோயமுத்தூர் மகா-ா-ா-ஸ்ரீ P. R. சுந்தரமய்யர் அவர்கள், B. A., L. T., ஹரிகேசவநல்லூர் முத்தையா பாகவதர் அவர்கள், மகா-ா-ா-ஸ்ரீ S. V. ரெங்கஸாமி ஐயரவர்கள் முதலிய ஸகல வித்வான்களுக்கும் எங்கள் வந்தனம் அளிக்கிறோம்.

ஒவ்வொரு மீற்றிங்கிலும் ஹாஜரான வித்வான்களையும் மற்றும் கனவான்களையும் வைத்துப் படம் பிடிக்கப்பட்டது. ஒவ்வொரு ரிப்போர்ட்டின் தலைப்பிலும் அப்படங்கள் சேர்க்கப்பட்டிருக்கிறது.

சென்ற இரண்டு மீற்றிங்குகளும் முடிந்தவுடன் விஜயநகரம் ஸமஸ்தான வித்வான் வீணை வெங்கடரமணதாஸ் பந்துலு அவர்கள் வீணையில் அற்புதமான விதமாய் கானஞ் செய்தார்கள். ஸங்கத்தார் யாவரும் அதற்காக அவர்களுக்கு நன்றியறிதலான வந்தனஞ் சொல்லுகிறார்கள். அவர்களைப்போலவே மற்ற வித்வான்களும் ஸங்கத்தின் அபிவிர்த்திக் கென்று தங்களுடைய வித்வத்திறமையை ஸமயா ஸமயங்களில் காட்டும்படியான கச்சேரி கள் செய்து யாவரையும் ஸந்தோஷிப்பிப்பார்கள் என்று நம்புகிறோம்.

இச்சங்கம் ஆரம்பித்த நோக்கமும், அதில் நடக்கும் விஷயங்களும் இன்னவையென்று இன்னும் அநேக வித்வான்களுக்குத் தெரியாமலிருப்பதற்காக விசனிக்கிறோம். விசேஷ மாய் இங்கே யிருக்கும் வித்வான்களில் சிலரைக்கொண்டு மேல்விலாஸம் தெரிந்தவர்களுக்கு மாத்திரம் இது பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அநேக வித்வான்கள் தாங்கள் இதுவரையும் மீற்றிங்குக்கு வராமலிருந்ததுபோல இனி இருக்கமாட்டோம் என்றும், தாங்களே முன் னின்று யாவையும் நடத்துவோம் என்றும் வாக்குக் கொடுத்திருக்கிறார்கள். நம் கர்நாடக ஸங்கீதத்தில் மிகுந்த பிரியமுடையவர்களாய் ஸங்கீத சாஸ்திரத்தின் விர்த்தியை விரும்பும் மற்றும் அநேக கனவான்கள் ஸங்கீத ஸபையின் விஷயமாய் நடந்துவரும் வேலைகளைக் கேள்விப்பட்டு தாங்களும் அதை ஆதரிப்போமென்று வாக்குக் கொடுத்திருக்கிறார்கள். சிலர் மிகுந்த தேக சிரமத்தையும், பணச்செலவையும் பாராமல் வெகுதூரங்களிலிருந்தும் வந்து ஸபையின் விர்த்திக்காக மிகுந்த ஊக்கம் எடுத்துக்கொள்ளும் விஷயத்தை கவனித்தால் அது இச்சங்கம் மேன்மேலும் விர்த்தியாகுமென்பதற்கு அத்தாக்ஷியாகிறது.

சிறு ஆரம்பத்தினின்றும் உற்பத்தியான நமது ஸங்கம் இவ்வளவு தூரம் விர்த்தியான தின் பெருமை இங்கே ஹாஜராயிருக்கும் கனவான்களுக்கும் வித்வான்களுக்குமே உரியது.

எல்லா நல்லெண்ணங்களையும், விருப்பங்களையும் வளர்ந்தோங்கச் செய்யும் கருணாநிதி யாகிய கர்த்தனுக்கே எல்லா மகிமையும் புகழும் உண்டாவதாக.

A. G. பிச்சைமுத்து B. A., L. T.,
செக்ரிடேரி.

# நாதோபாஸனை.

(தொடர்ச்சி 3-வது சங்க ரிப்போர்ட்டு 16-வது பக்கத்தில் காண்க.)

*தஞ்சாவூர் வக்கீல் மகா-ள-ள-ஸ்ரீ P. V. கிருஷ்ணஸ்வாமி ஐயர் அவர்களால் படிக்கப்பட்டது.*

அவ்விதம் அப்யஸிப்பதால் மஹத்ஸேவை தத்க்ருபா அவர்கள் கிருபைக்கு பாத்திரமாகுதல், பகவத் தர்மத்தில் சிரத்தா ஹரிகுணாசுருதி, பகவானிடத்தில் ரதி, தேகத்வய விவேகாத்ம ஞானம் திருடமான பக்தி பகவானுடைய தத்வஞானம் அவர் கிருபையால் எல்லாம் அறிகிற சக்தி ஆக பதினொரு அவஸ்தை மனது அடைந்து சுகத்தை அனுபவிக்கிறது என்று சொல்லியிருப்பதை சிரவணம் செய்து நாரதபக்தி சூத்திரத்தில் சொல்லியிருக்கிறபடி ஒன்றாக இருக்கும் பக்தி 11 விதமாக ஆகிறது என்பதையும் சிரவணம் செய்கிறான். ஈஸ்வரன் ஸ்வயம் ரூபமற்றவராக இருந்தும் தன் பக்தர்களின் மனது ரூபமற்ற வஸ்துவில் நன்றாய் செல்லாதென்று நினைத்து, கிருபையினால் பக்தர்கள் இச்சிக்கும் ரூபங்களை எடுத்துக்கொண்டு காப்பாற்றுகிறார். அவ்விதமான ரூபம் மலையிலுமில்லை கோவிலிலுமில்லை. பக்தர் ஹ்ருதயத்தில் தியானஞ் செய்யும் காலத்தில் சித்ரூபமாகவும், ஆனந்த ரூபமாகவும் விளங்குகிறார் என்று கணேசபுராணத்தில் சொல்லியபடி த்யானம் செய்தால்தான் ஈஸ்வரரூபம் வெளியாகுமென்று நினைத்து தன் அபீஷ்டத்தைக் கொடுக்கக்கூடிய ரூபத்தோடு கூடிய ஈஸ்வரனை உபாஸிக்கிறான். தேக ஆரோக்கியம் வேண்டுமானால் மஹாதேவனையும், கீதவித்தையை சித்தித்துக்கொள்ள ஸரஸ்வதியையும், சுகத்தை இச்சித்தால் நாதரூபத்தையும் இவ்விதமாக ஆதி பர்வம் 57-ம் அத்தியாயத்தில் சொல்லியிருக்கும் ரூபங்களைக்கேட்டு தனக்கு பிரீதியுள்ள ரூபத்தை தியானம் செய்கிறான். ஸகுணரூபதியானம் பாகவதம் 3-வது ஸ்கந்தம் 28-வது அத்தியாயத்திலும், கீதை 12-வது அத்தியாயத்திலும், பாகவதம் 11-வது ஸ்கந்தம் 14-வது அத்தியாயத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது. ஈஸ்வரனுடைய ரூபத்தின் ஒவ்வொரு அவயவ லக்ஷணத்தை அறிந்து ஒவ்வொரு அவயவத்தையும் செம்மையாய் த்யானம் செய்து, பிறகு முழுரூபத்தையும் த்யானம் செய்யவேண்டுமென்று சொல்லப்பட்டிருக்கிறது. அவ்விதமாக தன்னுடைய அபீஷ்டத்தை கொடுக்கக்கூடிய ரூபத்தை அறிந்து அதின் லக்ஷணத்தையும் அறிந்து மனதில் செம்மையாய் பதியும்படி தியானம் செய்தால் மனதிற்குரிய சஞ்சலஸ்வபாவம் மாறி ஸ்திரப்படும். அந்த ரூபத்திலேயே பிரீதி விருத்தியாகும். அந்த ரூப சம்பந்தமான தத்வங்களிலும் ஜனங்களிலும் கௌரவ புத்தி உண்டாகி, விஷயங்களில் செல்லும் மனது சாதாரணமாய் நிவிருத்தி அடையாதுபோல் தன் இஷ்ட ரூபத்திலிருந்தும் மனது நிவிருத்தி அடைகிறதில்லை. அந்த ரூபத்தில் உள்ள ப்ரீதியால் அதைப் பார்க்காத காலத்திலும் கேட்காத காலத்திலும் "விரஹாவஸ்தை" என்று சொல்லப்படும் துக்கம் உண்டாகும். மற்ற விஷயங்களில் வெறுப்பும் உண்டாகும். தன் இஷ்ட வஸ்துவுக்காகவேதான் ஜீவிப்பதாகவும், தான் செய்யும் கர்மங்கள் ஈஸ்வரனுக்காக செய்வதாகவும் நினைத்து, ஈஸ்வர ரூபமான எல்லாப் பிராணிகளிலும் ப்ரீதி உண்டாகும் தனக்கு நேரிடும் ஆபத்துகளும், கிடைக்கும் சம்பத்துகளும், தன்னுடைய சௌக்கியத்திற்கென்று நினைத்து சுகதுக்கத்தைப் பாராட்டுகிறதில்லை. மேல் சொல்லிய விஷயத்தைப் பற்றி பாகவதம் 3-வது ஸ்கந்தம், 29-வது அத்யாயத்தில் சொல்லியிருப்பதைக் கவனித்து அதை அனுஷ்டிக்கிறான். "என் அம்சத்தோடு கூடிய பிராணிகளுக்கு துரோகஞ் செய்து என்னை பூஜிப்பவனின் பூஜையை நான் ஒப்புக்கொள்ளுகிறதில்லை." தத்வங்களில் சிலவைகள்

சில பிராணிகளிடத்திலும், சிலவைகள் மற்ற பிராணிகளிடத்திலும் இருக்கிறது. அசேதனங்களைக் காட்டிலும் ஜீவன் உள்ளவைகளும் ஜீவன் உள்ளவைகளில் பிராணனுடன் கூடியவைகளும் அவைகளிலும் சித்தத்தோடு கூடியவைகளும், அவைகளிலும் இந்திரிய விருத்திகளோடு கூடியவைகளும், அவைகளில் ஸ்பர்ச குணத்தை அறியும் விருக்ஷங்களும் ரஸத்தைமாத்திரம் அறியும் மத்ஸ்யங்களும், கந்தங்களை அறியக்கூடிய பிரமரங்களும், சப்தத்தை அறியக்கூடிய ஸர்ப்பங்களும், ரூபத்தை அறியக்கூடிய காக்கைகளும், இருபக்கத்திலும் பல் உள்ளவைகளும், பாதம் இல்லாதவைகளும், அநேக பாதங்களோடு கூடியதும், 4 பாதங்களோடு கூடியதும், 2 பாதங்களோடு கூடியதும், வர்ணங்களில் பிராமணர்களும், வேத மறிந்தவர்களும், அவைகளின் அர்த்த மறிந்தவர்களும், நிஷ்காம கர்மம் செய்கிறவனும், வரிசையாக சிரேஷ்டர்கள் என்று சொல்லியிருப்பதை அறிந்து அனுஷ்டிக்கிறன். ஒரு மனுஷ்யனுக்குக் கழுத்தில் மாலைபோட்டும், காதில் ஆபரணம்போட்டும், கை விரல்களை நறுக்கினால் அவனுக்குத் திருப்தி உண்டாகுமா? அவயவங்கள் எல்லாம் சேர்ந்து தேகம்போல் ஜகத்திலுள்ள பதார்த்தங்கள் எல்லாம் சேர்ந்து ஈஸ்வர ரூபமானதால், எல்லாப் பிராணிகளையும் சமமாகப் பார்த்து ஒன்றுக்காவது துரோகம் செய்யக்கூடாது. மேற்சொல்லியபடி தியானம் செய்தால் ஈஸ்வரனால் சிருஷ்டிக்கப்பட்ட எல்லாப் பிராணிகளும் ஈஸ்வரனுடைய அம்சம் என்றும், அதில் ஒன்றாகிய தன் தேகமும் ஈஸ்வர அம்சம் என்று தெரிந்துகொண்டு அந்தர் முகமாய் பார்க்குங் காலத்தில், உலகத்தில் உள்ள முக்கியமான எல்லா வஸ்துக்களும் சூக்ஷ்ம ரூபமாக தன் தேகத்திலிருக்கிறதென்றும், அவைகளின் சூக்ஷ்ம ரூபத்தைக் கவனித்து, அதில் புத்தியைச் செலுத்தி விருத்தி பண்ணிக்கொண்டால், மனதின் வாஸனை ஒழிந்து மனது விருத்திகள் நசித்து, பிராரப்தத்தினால் உண்டாயிருக்கும் தேகம் நசிக்கும் வரையில் தத்வத்தை அறிந்து ஸ்வரூபாநந்தத்தை அனுபவித்து ஸஞ்சிதங்களை எல்லாம் ஞானத்தினால் நசிக்கச் செய்து தேக நாசம் உண்டாகும்பொழுது ஜன்மமற்ற பதவியை அடைகிறன். நாதத்தை உபாசிக்கும் வழியை விசாரிப்போம். நாதம் அக்ஷரரூபமாயும் ஸ்வர ரூபமாகவும் இருக்கிறது. வாசகரூபமான சப்தங்களுக்கும் வாச்சிய ரூபமான அர்த்தங்களுக்கும் வித்தியாசமில்லை. மேலே சொல்லப்பட்ட வாச்சிய சகுண ரூபமுள்ள தெய்வங்களை உபாஸிப்பதுபோல் வாசகமான மந்திரங்களை உபாஸிக்கலாம் * * * *

வர்ணரூபமாகவும் வர்ணங்கள் சேர்ந்த பதரூபமாகவும் அநேக பதங்கள் சேர்ந்த மந்திர ரூபமாகவும் நாதம் விளங்குகிறது. மரங்களின் ஸாரம் விரையிலிருப்பது போல் உலகத்திலுள்ள எல்லா வஸ்துக்களும் பீஜரூபமான அக்ஷரங்களில் அடங்கியிருக்கிறது. அக்ஷரங்களும் ஸங்கீதஸாஸ்திரத்தில் ஸ்வரங்கள் சேர்க்கை வாதி சம்வாதி அனுவாதியாக * *

சிறவண இந்திரியத்தின் சந்தோஷத்தை கொடுப்பதுபோலும் விவாதி என்று சொல்லப்படும் சில ஸ்வரங்கள் சேர்க்கை சிறவணத்திற்கு சுகம் கொடுக்காதது என்று சொல்வதுபோல் அக்ஷரங்கள் சேர்க்கை மந்திரம் என்றும் பலத்தை கொடுக்கும் என்றும் சொல்லப்பட்டிருக்கிற அக்ஷரங்களை நம்முடைய இஷ்டப்படி சேர்த்து சொல்லும் பக்ஷத்தில் பலம் கொடுக்கமாட்டாது என்று தெரியவருகிறது. ஆகையால் மந்திரத்தை உச்சரிக்குமுன் மாதிருகா சக்தியை அக்ஷர ரூபமாக தன் தேகத்தில் நியாஸம் செய்து மந்திர தேவதையை தியானம் செய்துகொண்டு மந்திரத்தை உச்சாரணம் செய்வதால் மனது ஒன்றுபட்டு தேவதையின் பிரஸாதத்தினால் மனது சுத்தப்பட்டு நல்ல கதியை அடைகிறன்.

மந்திரங்கள் புருஷமந்திரம் என்றும் ஸ்திரி மந்திரமென்றும் நபும்ஸக மந்திரம் என்றும் நாதம்மூன்று வகைப்படும். அக்ஷரங்களின் எண்ணிக்கையைக்கொண்டு மந்தரம் பீஜம் மாலை என்றும் 3 வகைப்படும். 10 அக்ஷரங்கூடியது மந்தரம் என்றும் அதை

பாலியத்தில் அப்பியஸிக்கக்கூடியதென்றும் 20 அக்ஷரங்கள் கூடியது பீஜம் என்றும் யௌவனாவஸ்தையில் அப்பியாஸிக்கக்கூடியதென்றும் 20 அக்ஷரத்திற்கு மேற்பட்டது மாலை என்றும் அதை விருத்தர்கள் அப்பியஸிக்கக்கூடியதென்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மந்திரத்திற்குள் 8 அங்கங்கள் அடங்கி இருக்கிறது. ருஷி, சந்தஸ், தேவதை, வினியோகம், பீஜம், சக்தி கீலகம் தியானம் பஞ்சபூஜை மந்திரத்தின் ஸ்வரூபத்தை அறிந்து மனனம் செய்து மந்திரதேவதை பிரஸாதத்தினால் மந்திர சித்தி அடைவார் என்று அறியவேண்டும். எந்த அக்ஷரங்கள் அடங்கியது மந்திரம் என்றும், மந்திரம் எந்த தெய்வத்தை குறிக்கிறதென்றும் இந்த மந்திரத்தை உச்சரிப்பதால் என்ன பிரயோஜனம் உண்டாகும் என்றும் என்ன பலத்தை உத்தேசித்து நாம் உச்சரிக்கிறோம் என்றும் அறிந்துகொள்ளவேண்டும். விருக்ஷத்தின் ஸாரம் பீஜத்தில் அடங்கி இருப்பதுபோல் மந்திர தெய்வத்தின் பலம் மந்திரத்தின் பதங்களில் அடங்கி இருக்கிறது மந்திரங்களின் சக்தியை அறிந்துகொண்டு அதின் முக்கியமானவை எதென்று அறிந்துகொள்ளவேண்டும். தெய்வத்தின் ரூபம் கைகளில் இருக்கும் அஸ்திரங்கள் நிறம் முதலியவைகளால் அறியவேண்டும். அந்த தெய்வத்தை மனதில் நினைத்து அதற்கு மனசு மூலமாய் பூஜை செய்யவேண்டும்.

தெய்வத்திற்கு பிரீதி கொடுக்கக்கூடிய கைஸம்ஞைகளை காட்டுவதால் தெய்வத்திற்கு பிரீதி உண்டாவதால் அதற்கு முத்திரை என்று பெயர். ஆவாஹன ஸ்தாபனம் ஸந்நிதான சந்நிரோதினி அவகுண்டினீ ஈஸ்வரனுடைய பிரீதிக்காக மந்திரத்தை உச்சிரிக்கிற உபாஸகன் பயத்திலிருந்தும் ரக்ஷிக்கப்படுகிறான் என்று குலார்ணவ 2 தந்திரம் 17 உல்லாஸத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. மேற்கூறியபடி நாதபிர்மத்தையும் உபாசிக்கக்கூடுமா ? அதை எவ்விதம் உபாஸிப்பது என்பதைப்பற்றி விசாரிப்போம்.

யாஞ்ஞியவல்கிய ஸ்மிருதி பிராயச்சித்தகாண்டம் 4 அத்தியாயத்தில் பாத்திரத்தினால் மூடப்பட்ட விளக்குக் காந்தி சிதறாமல் ஒன்றாகவே இருந்து ஜாஸ்தியாக பிரகாசிப்பதுபோல் ஹிருதயத்தில் பிரகாசிக்கும் ஆத்மாவை தியானம் செய்து மனதை வெளிவிஷயத்தில் பிரவர்த்திக்க ஒட்டாமல் தடுக்கவேண்டுமென்றும், எவன் மனது ரூபமற்ற ஆத்மாவில் பிரவேசிக்காமல் சமாதி அவஸ்தையை அடையமாட்டானோ அவன் சப்த பிர்ம உபாஸனை செய்யவேண்டும் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. வேதத்தில் சொல்லி இருக்கும் மார்க்கத்திற்கு விரோதமில்லாமல் ஆத்மாவில் மனதை செலுத்தி சாமவேதத்தில் சொல்லிய கானங்களையும் அப்பியாஸித்து அந்த அப்பியாஸத்தால் மனதை ஸ்திரமாக்கிக் கொண்டு சப்த ரூபத்தையும் விட்டு பரப் பிர்மத்தில் லயப்படுகிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையால் சப்தரூபமான பிர்மத்தை உபாஸிக்கவேண்டும். சப்த பிர்மத்தின லக்ஷணம் கர்க்கஸம் ஹித விசுவஜித் கண்டம் 44 அத்தியாயத்திலும் பாணிணீய மகாபாஷயத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

*　　*　　*　　*　　*

சப்த ரூபமான பிர்மத்திற்கு வியாகறண சாஸ்திரம் முகம் பிங்கள சாஸ்திரமான சந்தஸ் சாஸ்திரம் பாதங்கள் மீமாம்ஸா சாஸ்திரம் கைகள் ஜோதிஷசாஸ்திரம் நேத்திரங்கள் கந்தர்வ சாஸ்திரம் நாக்குவைசேஷிக சாஸ்திரம் மனது ஸாங்கிய சாஸ்திரம் புத்தி தர்க்க சாஸ்திரம் அஹங்காரம் வேதாந்த சாஸ்திரம் சித்தம் என்றும் வேத ரூபமான தேகத்திற்கு சந்தஸ் கால்கள் கல்பம் கைகள் ஜோதிஸ் சாஸ்திரம் நேத்திரங்கள் நிருக்தம் காதுகள் சிக்ஷை மூக்கு வியாகரணம் முகம் இவைகளை லக்ஷணத்தோடு அறிகிறவன் பிர்ம்ம லோகத்தில் பிரகாசிக்கிறான் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. உபாஸ்ய தெய்வத்தின் அவயவங்களில் ஒவ்வொன்றையும் செம்மையாய் அறிந்து எல்லா அவயவங்களையும் அறிந்துகொள்ளவேண்டுமென்று

சொல்லியபடி ரஸஞ ரூபமான காந்தர்வ சாஸ்திரத்தை அப்யஸிப்பது உபாஸனையாகும். சங்கீத வாத்யங்களினால் உண்டாகக்கூடிய ஆனந்தத்தை அடைவிப்பதால் அதற்கு காந்தர்வ சாஸ்திரம் என்று பெயர். ஆகையால் சாமவேதத்தில் சொல்லியபடி ஸ்வரவர்ணம் முதலிய வைகளை அறிந்து கானம் செய்பவன் உபாஸகனாவான். வேதத்தில் வர்ணங்களை ஸ்வரத் தினாலும் காலத்தினாலும் ஸ்தானத்தினாலும் பிரயத்னத்தினாலும் அனுபரதானத்தினாலும் 5 வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. உதாத்தம், அனுதாத்தம், ஸ்வரிதம் என்று ஸ்வரங் கள் ஹ்ரஸ்வம தீர்க்கம் ப்லுதம் என்று காலத்தினால் விபாகம் உரஸ்கண்டம் சிரஸ் ஜிஹ்வா மூலம தந்தங்கள் நாஸிகை ஒஷ்டம் தாலு ஆக 8 ஸ்தானங்களிலிருந்தும் உத்பத்தி, இவ்வித லக்ஷணங்களை அறிந்து * * *

செம்மையாய் வர்ண பிரயோகம் செய்தால் பிரம்மலோகத்தில் பூஜிக்கப்படுகிறான். சாமவே தத்தில் சொல்லிய உதாத்த அனுதாத்த ஸ்வரிதஸ்வரங்களிலிருந்தும் 7 ஸ்வரங்கள் உண்டா யிற்று. உதாத்தத்திலிருந்து நிஷாதகாந்தாரஸ்வரங்களும் அனுதாத்தத்திலிருந்தும் ருஷப தைவதங்களும் ஸ்வரிதத்திலிருந்து ஷட்ஜமத்யம பஞ்சமங்கள் உண்டாயிற்று. வேதங்களில் சொல்லி யிருக்கும் கானங்களை அப்யஸிக்க சக்தியற்றவர்களுக்கு மேற்சொல்லிய 7 ஸ்வரத் தோடுகூடிய லௌகீக கானத்தை செய்து ஸங்கீத சாஸ்திரத்தை அப்யஸித்தால் மனது ஒன்று பட்டு ஆத்மபாவமடைகிறான். ஆகையால் சங்கீதசாஸ்திரத்தின் லக்ஷணத்தை செம்மை யாய் அறியவேண்டும். ஸங்கீதம் என்பது கீதம் வாத்யம் நிருத்யங்களோடு கூடியது.

கீதம் மார்க்கம் என்றும் தேசிகம்என்றும் இருவகை.—பிர்மாதிகளால் காட்டப்பட்டு பர தாதிகளால் சம்பு சந்நிதானத்தில் பிரயோகம் செய்யப்பட்டது மார்க்கம். தேசங்களுக்குத் தக்க படி பாடப்பட்டு ஜனங்களுக்கு ஆஹ்லாதத்தை கொடுக்கக்கூடியது தேசி. தன் இஷ்டத்தை அனுசரித்து பாலர்கள், ஸ்திரீகள் ராஜாக்கள் இவர்களால் பாடப்படும் மார்க்கம் என்பது சாம வேதத்திலிருந்து எடுக்கப்பட்டது. கீதம் நாதரூபமாக இருக்கிறது நாதம் அநாஹதம் (பிர யத்தனமன்னியில் ஸ்வயமாக உண்டாகிறது) ஆஹதம் (பிரயத்தனத்தினால் உண்டாகிறது.) என்று இருவகை. ஆஹத நாதம் சுருதி முதலியவைகளாக வியக்தமாகி ஜனங்களை ரஞ்சிக்கச் செய்யும் அது வியவகார திசையில் ஹ்ருதயத்தில் சப்திக்கும் காலத்தில் மந்தரம் என்னும் கண்டத்தில் மத்யம என்னும் தலையில் தாரம் என்னும் பெயர் அடைகிறது. நாதம் மனுஷ்ய னுடைய தேகத்திலிருந்து உண்டாவதாலும் வீணையிலிருந்து உண்டாவதாலும், பில்லாங் குழலிலிருந்து உண்டாவதாலும் 3 வகை.

நாதமானது முதலில் சிரவணேந்திரியத்தில் குறைச்சலான சப்தத்தோடு விழுந்தவுடன் சுருதி என்று பெயரடைகிறது. அது ஸ்வரங்களுக்கு அவயவமாகிறது. ஹ்ருதயத்தி லிருந்து மேலாகச் செல்லும் நாடியுடன் சம்பந்தப்பட்ட நாடிகள் 22 அவைகளுடன் சம்பந் தப்பட்ட சுருதிகளும் 22 இந்த 22 சுருதிகளிலிருந்தும் 4 வது சுருதி ஷட்ஜமும், 7 வது ரிஷபமும், 9 வது காந்தாரமும், 13 வது மத்தியமும் 17 வது பஞ்சமும் 20 வது தைவதமும் 22 வது நிஷாதமும் உண்டாகிறது. சுருதி ரூபமாக முதலில் கேட்ட பிறகு காதுக்கு இனிமையாகவும் மனதுக்கு சந்தோஷம் உண்டுபண்ணக் கூடியதாகவுமுள்ள நாதத்திற்கு ஸ்வரம் என்று பெயர். ஷட்ஜாதி சப்த ஸ்வரங்களினாலும் ஸ்தாயீ ஆரோஹ அவரோஹம் சஞ்சாரம் என்று சொல்லப்படுகிற கானகிரியையான வர்ணத்தினால் அலங்கரிக்கப்பட்டு ஜனங்களுடைய சித்தத்தை சந்தோஷப்படுத்தும் த்வனிக்கு ராகம் என்று பெயர்.

## Ranjayateethi Ragah.

சந்தோஷப்படுத்துவதால் ராகம் ஸப்த ஸ்வரங்களில் சில சில ஸ்வரங்கள் சேர்ந்தும் எல்லா ஸ்வரங்களும் சேர்ந்தும் ராகமாகிறது. 1, 2, 3, 4 ஸ்வரங்களோடு கூடிய ராகங்களுக்கு ஆர் சிகம், காதிகம், ஸாமிகம் ஸ்வராந்தரகம் என்று பெயர். 5 ஸ்வரங்களோடு கூடினது ஔடவம்

என்று பெயர். உடு என்னும் நக்ஷத்திரங்கள் சஞ்சரிக்கும் ஆகாசம் பூதங்களில் ஐந்தாவ தானதால் 5 ஸ்வரத்தோடு கூடியதற்கு ஒளடவம், 6 ஸ்வரங்களோடு கூடியது ஷாடவம் என்றும், 7 ஸ்வரங்களோடு கூடியது சம்பூர்ணம் என்றும் பெயர்.

ஸ்வரங்கள் சுத்த ஸ்வரங்கள் என்றும் விகிருத ஸ்வரங்கள் என்றும் இருவகை. முழு சுருதிகளோடும் கூடியது சுத்த ஸ்வரம். சுருதிகள் ஜாஸ்தி குறைவினால் விகிருதம் என்று பெயர். ஒவ்வொரு ராகத்திலும் வாதி ஸம்வாதி, அனுவாதி, விவாதி என்னும் 4 விதமான ஸ்வரங்கள் ஏற்படலாம். அதில் வாதி என்பது ஒன்று தான். அவ்விதமாகவே சம்வாதியும் ஒன்று தான். ராகத்திலுள்ள மீதி ஸ்வரங்கள் அனுவாதி ராகத்தில் சேராத ஸ்வரம் விவாதி ராகத்திலுள்ள ஸ்வரங்களின் மத்தியில் எந்த ஸ்வரம் சந்தோஷத்தை உண்டுபண்ணக் கூடியதோ அது ஜீவ ஸ்வரம் என்றும் அம்சம் என்றும் சொல்லப்படும். பிரயோகத்தில் வாதி ஸ்வரம் அதிகமாக உபயோகப்படுத்தப்படும். ராக ஸ்வரங்களில் அந்த ஸ்வரத்திற்கு தான் பெருமை யுண்டு. அதினால் தான் ராக லக்ஷணம் நிச்சயிக்கப்படுகிறது.

Vadhathí ithi Vadhi.

ராக லக்ஷணத்தை அந்த ஸ்வரத்தைக்கொண்டு நிச்சயமாகக் காட்டுவதால் அதற்கு வாதி என்று பெயர். அது ராஜன்போல் விளங்குகிறது. ராஜனுக்கு மந்திரி ஒத்து காரியம் செய்வதுபோல் சம்வாதி வாதிக்கு ஒத்தாசை செய்யும் வேலைக்காரன்போல் முக்கியமான ஸ்வரத்தை அனுசரித்து வேலை செய்வதால் அனுவாதி. சத்துருக்களைப்போல் கெடுப்ப தால் விவாதி.

சம்வாதி வாதி ஸ்வரத்தைக் காட்டிலும் பெருமை குறைந்திருந்தாலும் மற்ற ஸ்வரங் களைக் காட்டிலும் இது முக்கியமானது. ராகமாகிற வீட்டிற்கு வாதி சம்வாதி என்கிற இரண்டு ஆதார ஸ்தம்பங்கள். ஒரு குடும்பத்தில் தனிகனை எஜமான் முக்கியமானவன். அவனைக் காட்டிலும் அவன் சம்சாரம் பிள்ளைகள் குறைந்த பெருமையோடு கூடியவர்க ளானாலும் மற்றவர்களைக் காட்டிலும் முக்கியமானவர்கள். வேலைக்காரன் எஜமான் இஷ்டத் தை அனுசரித்து வேலை செய்வதுபோல அனுவாதி ஒத்தாசை செய்யும். இரண்டு ஸ்வரங். களுக்கு நடுவில் 8 அல்லது 12 சுருதிகள் இருந்தால் ஒன்று மற்றொன்றுக்கு சம்வாதி ஷட்ஜத்திற்கு மத்யமமும் பஞ்சமமும் தைவதத்திற்கு ரிஷபமும் காந்தாரத்திற்கு நிஷாதமும் இவ்விதமாக வாதி சமவாதிகள். ஒளடவ ராகத்தில் ஸ, ரி க. ப. த * * என்கிற ஸ்வரங்களில் "ஸ" என்பது வாதியானால் "ப" * என்பது ஸம்வாதி. மீதி மூன்றும் அனுவாதி. இதில் க என்பது வாதியானால் நி என்பது"க"வுக்கு சம்வாதி யானாலும் வர்ஜ்ய ஸ்வரமானதால் சேர்க்கக் கூடாது. வர்ஜ்ய ஸ்வரங்களையும் சங்கீத வித்வான்கள் தங்கள் சாமர்த்தியத்தினால் அவரோஹணத்தில் உபயோகப்படுத்தி ஆநந்தப் படுத்துவார்கள். அது தோஷமல்ல.

Ishathsparsa châlanena darsayathi lakshyake
Prâyah svaram vivâdhinam yojayanthi avaròhane
Na thathra sâsthreshu dhoshoyam grantheshu niyamohyasau
Yathe- Shath krishna varnènas ubhrasyâthi subhrathâ.

ஆலாபம் செய்ய ஆரம்பிக்கும் காலத்தில் கீதத்தின் ஆரம்பம் கிருஹம் என்றும் முடிவு நியாஸம் என்றும் பெயர். வர்ணம் என்பது கானக்கிரியை அதுஸ்தாயீ, ஆரோஹம், அவ ரோஹம், சஞ்சாரம் என்று 4 வகைப்படும். ஒரே ஸ்வரத்தை அடிக்கடி பாடி மத்தியில் நிறுத்தி பாடுவது ஸ்தாயீ.

Sthithvâ sthithvâ prayògassyâth ekasyava svarasyayah
Sa sthâyivarna ithi.........

ஸ்வரங்களை மேல் வரிசையில் சேர்த்துப் பாடுவது ஆரோஹம். கீழ் வரிசையில் சேர்த்து இறங்கி பாடுவது அவரோஹம். இவைகளைச் சேர்த்து சஞ்சாரி ஒரு ராகத்திற்குரிய ஸ்வரங்களின் வரிசையும் அவைகளின் அவஸ்தையும் காட்டக்கூடியதும் மூர்ச்சனை என்று பெயர். ஷட்ஜ மத்யம காந்தாரம் என்னும் கிராமத்தோடு கூடியது. சிவசக்தி சம்பந்தத்தால் ராகங்கள் உண்டாயிற்று. நாட்டியம் செய்யும்பொழுது சிவனுடைய 5 முகத்திலிருந்தும் சக்தியின் முகத்திலிருந்தும் 6 ராகங்கள் உண்டாயிற்று. ஸத்தியோ ஜாதமுகத்திலிருந்து ஸ்ரீ ராகமும், வாம தேவத்திலிருந்து வஸந்தமும் அகோரத்திலிருந்து பைரவமும், தத் புருஷத்திலிருந்து பஞ்சமமும் ஈசான்யத்திலிருந்து மேகராகமும் தேவியின் முகத்திலிருந்து நட நாராயணனும் ஆக 6 புருஷ ராகங்கள் உண்டானதாகச் சொல்லப்பட்டிருக்கிறது.

Siva sakthi samâyògâth râgânâm sambhavo bhaveth
Panchasyath pancha râgâ syuh shasthtsthu girigamukhâth
Sadhyo vakhthrath thu srirâgo vamadevâth vasanthakhah
Aghorâth bhairavo a bhùth thathpurushâth panchamobhavath
Isânakhyath megarâgò nâtyârambhe sivâth a bhuth
Girijâyâ mukhâth lâsye natta nârâyanò bhavath

புருஷ ராகங்கள் ஒவ்வொன்றுக்கும் 5 ஸ்திரீகளும் 8 புத்ரர்களும் உண்டானார்கள் என்றும் கர்கஸ மஹிதா விசுவஜித கண்டத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதியில் நாதரூபமாக பிரமம் வெளிப்பட்டவுடன் 6 ருதுக்களோடு கூடிய ஸம்வத்ஸரத்தில் காலத்திற்குத் தக்கபடி வியக்தமாகி ஜனங்களுக்கு அனுராகத்தை உண்டுபண்ணியதென்றும் சொல்லலாம். ஸ்வரங்களின் சேர்க்கையால் பலவித ராகங்கள் உண்டாயிற்று. அந்த ஸ்வரங்கள் சுத்தம் சாயாலகம் சங்கீரணம், என்று 3 வகையாக பிரிக்கப்படும். சாஸ்திர விதிப்படி பாடி ரஞ்சிக்கச் செய்வது சுத்தம் என்றும் மற்ற ராகங்களின் சேர்க்கையினால் ரஞ்சிப்பிக்கச் செய்வதால் சாயாலகம் என்றும் சுத்த ராகமாகவும் சாயாலக ராகமாகவும் ரஞ்சிக்கச் செய்வதால் சங்கீரணம் என்றும் பெயர்.

* * * *

வியாதி சத்துரு பயசோகம் முதலியவைகளை நாசம் செய்யவேண்டிய காலத்தில் ஔடவம் என்கிற 5 ஸ்வரங்களோடு கூடிய ராகத்தையும் யுத்தத்தில் வீர ரஸத்தோடு கூடியதும், குண கீர்த்தனம் செய்யும் காலத்தில் சிருங்காரத்தோடு கூடிய ஷாடவம் என்கிற 6 ஸ்வரங்களோடு கூடிய ராகங்கள் பாடவேண்டும்.

Vyadhinásē sathrunāse bhaya sóka vinásanac
Oudavásthu pragáthavyáh graha santhiyartha karmani
Sangráme virathám rúpam lálayan gunakírthane
Gáne shádva rágánám gadhitham púrva sûribhih.

கிருஹம் என்னும் கீதாத்ய ஸ்வரம் அம்சம் மத்தியில் விஸ்தாரப்படுத்தும் ஸ்வரமும் நியாஸம் என்றும் முடிவில் பாடும் ஸ்வரமும் அபந்நியாஸம், தாரஸ்தானம் வரையிலும், மந்திரஸ்தானம் வரையிலும் ஸ்வல்லப ஸ்வரத்தையும் ஜாஸ்தி ஸ்வரத்தை ஔடவம், ஷாடவம் இவை

வியக்தமாக எடுத்துக் காட்டிப் பாடுவது ஆலாபம். ஆலாபம் செய்யும் காலத்தில் ஸ்வரத்தோடு சேராமலே நே, தா முதலிய அக்ஷர பிரயோகங்களும் ஹரி அனந்த சம்போ முதலிய சப்த பிரயோகங்களும் கல்பனை செய்வார்கள்.

ஒரு பெரிய நகரத்தில் ராஜ மார்க்கம் என்று சொல்லப்படும் விசாலமான வீதிகள் ஏற்பட்டிருக்கிறதுபோல சங்கீதம் என்றும் நகரத்தில் மேளராகம் என்று சொல்லப்படும் ராஜ மார்க்கங்கள் இருக்கின்றன. அவைகள் வழியாய்ப் போகாமல் சின்ன சந்துகளில் சென்று வழி தெரியாமல் சிரமப்படுவதுபோல் ஜன்ய ராகங்களில் சிரமப்படுவார்கள். ஆகையால் மேளராகங்களை அறியவேண்டும். ஸ்ரீராகம் சிசிர ருதுவிலும் வஸந்த ருதுவில் வஸந்த ராகமும் கிரீஷ்மத்தில் பைரவமும் சரத்காலத்தில் பஞ்சமமும் வர்ஷங்களில் மேக ராகமும் ஹேமந்த ருதுவில் நட நாராயண என்கிற ராகமும் பாடவேண்டும். தௌரிய த்ருகம் என்றும் கீதவாத்ய நிருத்யமான யானையை தாளமாகிய அங்குசத்தால் அடக்க வேண்டும். காலம் கிரியை மானம் இவைகளின் சேர்க்கைதாளம் என்று சொல்லுவார்கள். க்ஷணிகாதிகள் காலம் தானங்களின் சேர்க்கை கிரியைகளின் நடுவில் ஏற்படும் விச்ராமத்திற்கு மானம் என்று பெயர்.

Kálam kishanádhiko gyeah
Thálayoh gatanam kriyá
Kriyayòrantharam yaththu visrámò mánam uchyathe
Thakárah sankarah prókthah lakárah sakthiruchyathe
Thayóh sammèlanam.........

சிவசக்திசம் மேளனம், தாளம், காலம், மார்கம், கிரியை, அங்கம் கிருஹம், ஜாதிகலா, லயம், யதி, பிரஸ்தாரம் என்று சொல்லப்படும். 10 பிராணங்களினால் வியாபிக்கக்கூடியிருப்பதுமான காலம் தாளம்; மார்கம் தேசி என்று தாளம் இருவகை. சுத்த, சாலகம், சங்கீர்ணம் என்று 3 வகை சதுரசரம், திஸரம், கண்டம் மிச்ரம், சங்கீரணம் என்று 5 ஜாதிகள் சமம் விஷமம் என்று கிருஹம் இருவகை. விஷமம் என்பது அதீதம் அநாகதம் என்று இருவகை. லயம் என்பது கிரியைக்குப் பிறகு ஏற்படும் விச்ராந்தி, துருதம் மத்யம், விளம்பிதம் என்று 3 வகை. ஏகதாளம், ரூபகம், திருபுடை, ஜம்பை, மட்யமு, துருவ, அடதாளம் ஆக தாளங்கள் 7 வகை. வாத்தியத்தின் லக்ஷணம் வீணை அப்யசிக்கும் வழி என்றும் உபந்நியாஸத்தில் விஸ்தாரமாகச் சொல்லப்படும்.

**நிருத்யம்**—பிரம்மா பரத ரிஷிக்கும், பரதர் கந்தர்வர்கள் முதலிய தேவதா ஸ்திரீகளுக்கும் பரத சாஸ்திரத்தை உபதேசித்தார். பிறகு பரதாசாரியார் நாடிய கர்த்தர்களின் அம்சத்தில் ஒருவராகிய பரமசிவனிடத்தில் கந்தர்வ ஸ்திரீகளை நாட்டியம் செய்யும்படி செய்வித்தார். கைலாஸபதியும் தண்டு மஹா ரிஷியும் பரதரிஷிக்கு விசேஷமாக உபதேசம் செய்தார்கள். தண்டு மஹா ரிஷியால் செய்யப்பட்டதால் தாண்டவம் என்று பெயர். பரமசிவனால் உபதேசிக்கப்பட்ட சில பாகங்களுக்கு லாஸ்யம் என்று பெயர். அதை சிவன் பார்வதிக்கும், பார்வதி லாஸ்யத்தை பாணாசுரன் பெண் உஷைக்கும் உபதேசம் செய்தார்கள். உஷா மூலியமாய் துவாரகா ஸ்திரீகளும் கோபிகா ஸ்திரீகளும் கற்றுக் கொண்டார்கள். பரதம் என்பது நாட்டியம் நிறுத்தம், நிருதயம், என்று 3 வகை. நாட்டியம் நாடகத்தில் பிரயோகப் படுத்துவதாகும். நிறுத்தம் தாள லயசகிதமாயும். ரஸபாவங்கள் குறைந்ததாகவும் இருக்கும். நிறுத்தியம் தாள லயசகிதமாய் ரஸபாவங்கள் குறையாமல் இருக்கும் மேற் சொல்லிய ஒவ்வொன்றும் லாஸ்யம் தாண்டவம் என்று இருவகைப்படும். உட்கார்ந்து அபிநயிப்பது

லாஸ்யம். பரமசிவன் பார்வதிக்கு உபதேசம் செய்தது. நின்றுகொண்டு அபிநயிப்பது தாண்டவம். வாத்யம் ருக்வேதத்திலிருந்தும் அபிநயம் எஜுர் வேதத்திலிருந்தும், கானம் சாம வேதத்திலிருந்தும், ரஸம் அதர்வண வேதத்திலிருந்தும் பிரம்மாவினுல் கிடைக்கப்பட்டது. நிருதயம் மஹாராஜ சபையில் காண்பிவிக்கவேண்டும்.

Ṛigyagussámavèdhèbhyo vèdháchcháthavanáth kramâth
Védhyam abhinayam gítham rasân sangrihya padmabhúh.

**அபிநயம்**—

பதார்த்தத்தை தெரிவிக்கும்படி செய்வதால் அபிநயம் என்று பெயர். விபாவானுபாவாதிகளை காண்பிவித்து ரஸஞானத்தை உண்டுபண்ணும் படியான கிரியை. கண்டத்தால் கீதத்தை பாடவும், ஹஸ்தத்தால் அர்த்தத்தை காண்பிப்பதும், பாதங்களினுல் தாளத்தையும் காட்டவும் வேண்டும். எங்கே ஹஸ்தம் காண்பிக்கப்படுகிறதோ அங்கே திருஷ்டியும், திருஷ்டியிருக்கும் இடத்தில் மனதும், மனது பாவத்துடனும், பாவம் ரஸத்துடனும் சேரவேண்டும். அபிநயம் அப்பியாஸிப்பதின் பலன் ருகம் வருத்தம் சோகம் முதலியவைகளை குறைப்பதில் முக்கிய சாதனமானது. பிர்மானந்தத்தை காட்டிலும் இது அதிக ஆநந்தத்தை கொடுக்கும்.

அபிநயம் (1) ஆங்கிகம் (2) வாசிகம் (3) ஆஹாரியம் (4) ஸாத்விகம் என்று 4 வகை. ஆங்கிகம் என்பது அங்கங்களினுல் காண்பிக்கப்படுவது வாசிகம் காவ்யநாடகாதிகளில் வாக்கியத்தால் காண்பிக்கப்படுவது. ஹாரகேயூர முதலிய ஆபரணங்களினுல் அலங்கரிப்பது ஆஹாரயம் சாத்விக பாவங்களினுல் காண்பிப்பது சாத்விகம் ஆங்கிகம்—நிருத்தயத்தில் மாற்றியும் உபயோகிக்கவேண்டும். அங்க பிரத்யங்க உபாங்கபேதத்தால் 3 விதம் சிறஸ், ஹஸ்தங்கள் கக்ஷம் பார்சுவம் கடிதடம் பாதங்கள் இவைகள் அங்கங்கள். ஸ்கந்தம், பாகு, பிருஷ்டம், உதறம், துடை, முழங்கால், இவைகள் பிரத்யங்கம் திருஷ்டி புருவம், கண் விழி, கபோலம், மூக்கு, மோவாய்க்கட்டை உதடு, பல், நாக்கு, சிபுகம், வதனம், ஆக 12 உபாங்கங்கள்.

**க்ரிவாபேதங்கள்**—சுந்தரீ, திரச்சீன, பரிவர்தித, பிரகம்பித, என்று நான்கு விதங்கள்.

**திருஷ்டிபேதம்**—ஸமம், ஆலோகிதம் ஸாசி பிரலோகித நிமீலித ஆலோகித அனுவிருத்த அவலோகித ஆக 8 விதம். கிரந்தாந்தறங்களில் 44 விதம் ஸமம், பிரலோகிதம் ஸகித்தம், சிருங்காற, உல்லோகித, அத்புத, கருணு, விஸ்மய, திருப்த, விஷண்ண, பயங்கற ஸாசீ, த்ருத, வீற, ரௌத்ர, தூர இங்கித, விலோகித, விதர்கித, சங்கித, அபிதப்த அவலோகித, சூன்ய, ஹிருஷ்ட, உக்ர, விப்ராந்த, சாந்த, மீலித, ஸூசன, லஜ்ஜித மலின, தரஸ்த, ம்லான, முகுள, குஞ்சித, ஆகாச, அர்த்தமுகுள, அனுவிருத்த, விப்லுத ஜிஹ்ம, விகோச, மதிற, ஹிருத்ய, லலித ஆக 44

**சிறேபேதம்**—சமம், உத்வாஹிதம், அதோமுகம், ஆலோலிதம், துதம், கம்பிதம், பறுவிருத்தம், உத்க்ஷிப்தம், பரிவாஹிதம் ஆக 9 கிருந்தாநநந்தத்தில் 24 விதம் துத, விதுத, ஆதூத, அவதூத, கம்பித, ஆகம்பித, உத்வாஹித, பரிவாஹித, அஞ்சித, நிஹஞ்சித, பறுவிருத்த உத்க்ஷிப்த, அதோமுக, லோலித திரயங், நதோந்நத, ஸ்கந்தானத, ஆறுத்ரிக, ஸம, பார்சுவா உமுக ஸௌம்ய, ஆலோலித, திரச்சீன, பிரகம்பித ஸௌந்தரிய ஆக 24

**ஹஸ்தபிறணலக்ஷணம்**—பிரஸாரண, குஞ்சித றேசித, புங்கித, அபவேஷ்டித, பிறேரித, உத்வேஷ்டித வியாவிருத்தி, பரிவிருத்தி, ஸங்கேத சிஹ்ந, பதார்த்தடீகா ஆக 12

**ப்ருபேதம்**—*ஸகஜப்ரு, பதிதப்ரு, உத்க்ஷிபத, சதுற, ரேசித குஞ்சித ஆக* 6.

**ஸம்யுதஹஸ்தபேதம்**—*அஞ்சலிஹஸ்த, கபோதகர்கட, ஸ்வஸ்திக டோலா, புஷ்பபுட, உத்ஸங்க, சிவலிங்க, கடகாவர்தன, கர்தரீ, ஸவஸ்திக, சகட, சங்கு சக்ற, ஸம்புட, பாச, கீலக, த்ஸ்ய, கூர்ம, வராஹ, கருட, நாகபந்த, கட்வா, பேருண்ட, அவஹித்த ஆக* 24

**அஸம்யுக்தஹஸ்த** 31 *தேவதா* 16, *அவதார* 10 *சமுதர* 7 *பாந்தவ ஹஸ்தா* 11 *நவக்மரஹா* 9 *வர்ண* 4 *பிரஸித்தருஜ* 28 *புண்யாநதிஹஸ்த* 14 *விருக்ஷ ஹஸ்த* 23 *சிம்மாதிமிருக* 21 *பக்ஷிஹஸ்த* 21 *ஜலஜந்து* 5

**அஸம்யுக்தஹஸ்த**—31 *பதாக ஹஸ்த, த்ரிபதாக அர்த்தபதாகமயூர் அர்த்தசந்தற, அருள, சுகதுண்ட, முஷ்டி, சிகற கபித்த, கடகாமுக, ஸூசி, சந்தறகல, கோச, ஸர்பசீர்ஷ, மிருகசீர்ஷ, ஸிம்மமுக, லாங்கூல ஸோலபத்ம, சதுர, பிறமற, ஹம்ஸாஸ்ய, ஹம்ஸபக்ஷ, ஸந்தம்ச, முகுள, தாம்றசூட த்ரிசூல, ஊர்ணநாப, பாண, அர்த்ஸூசி, ஆக* 31

*மேற்கண்டபடி கீதவாத்ய நிருத்யங்களின் லக்ஷணங்களை அறிந்து கந்தர்வ சாஸ்திரத்தை அப்பியஸித்து நாதரூபமான பிர்ம்மத்தின் அவயவமான கீதவாத்ய நிருத்யங்களில் மனதை செலுத்தி ஏகாந்தம் உண்டாகும்படி செய்தால் சப்தபிர்மத்தின் அவயவமான ரஸனை அங்கத்தை த்யானம் செய்வதாகும். அந்த அங்கத்தை அடிக்கடி த்யானம் செய்து சப்த பிர்ம ரூபத்தை முழுவதும் அறிந்து அதற்குக் காரணமான நாதத்தின் ரூபத்தை அறிந்து மன பிரஸாதம் அடைந்து துர்வாஸனைகளை போக்கடித்து சுபவாஸனையை விருத்தி செய்து அதினல் ஸஞ்சிதம் என்று சொல்லப்படும் கர்மங்களை கர்மபலனை இச்சிக்காமல் செய்துகொண்டும் பலம் குடுக்க ஆறம்பித்த பிராரப்த கர்மம் முடியும் வரையில் உபாஸனம் செய்து தேகம் நசித்தபின் ஆனந்தத்தை அடைகிறுன்.*

## நாதமகிமை.

தஞ்சாவூர் வக்கீல் மகா-ா-ா-ஸ்ரீ P. V. கிருஷ்ணசாமி ஐயர் அவர்களால் படிக்கப் பட்டது.

Akachatathapayâdhyaih sapthabhih varna vargaih
Virachitha mukha bhâhû pâdha hrith kukshi madhvâ
Sakala jagadadhîsa sâsvatâ visva yonirvitharathu parisudham
chètasas sâradha nah.

(பொருள்)—அ. க. ச. ட. த. ப. ய வர்கங்களான வர்ணங்களாகிற முகம், கைகள், கால், ஹ்ருதயம், குக்ஷி, மத்யம் என்கிற அவயவங்களோடு கூடியவனும், எல்லா ஜகத்தையும் அடக்கி ஆளக்கூடியவனும், அழிவற்ற சாச்வத பதவியுடையவனும், விசுவத்திற்கு காரணமாக இருப்பவனுமான சாரதா என்கிற வாக்தேவி நம்முடைய சித்தத்தை சுத்தம் செய்யும்படி பிரார்த்திக்கிறோம்.

1. உலகத்திலுள்ள எல்லா பிராணிகளும் சுகத்தையே அடையவிரும்புகிறார்கள். சில ஜனங்கள் தனத்தினாலும், சிலர் தேகாரோக்கியத்தினாலும், சிலர் பலத்தாலும், சிலர் ஞானத்தாலும் இன்னும் பலவிதங்களாலும் சுகத்தை அடைய இச்சிக்கிறார்கள். ஆனால் மேற்சொல்லியவைகள் ஒவ்வொன்றும் நீடித்து சுகம் கொடுக்காததாலும் துக்கமற்ற சுகத்தை கொடுக்கக் கூடாததாலும் அவைகளால் அடையப்படும் சுகம் சுகமல்ல. மனது பிரஸாதமடைந்து அதனால் அடையக்கூடிய சுகமே சுகம். மனது சுபாசுப கர்மங்களில் அடிக்கடி பிரவர்த்தித்து அதன் வாஸனை பலத்தால் கலக்கமடைந்து சஞ்சலமாகிறது. விஷயங்களால் உண்டாகும் சுகத்தில் ஆசைகொண்டு பலவிதமான விருத்திகளுக்குட்பட்டு மலினமாகி சுகத்தை அடையும் மார்க்கம் தெரியாமல் வருத்தமடைகிறது. மனதுக்கு அவ்விதம் ஏற்படும் துக்கத்தை நிவிர்த்தி செய்து அதை ஒரு வழியில் செல்லும்படி செய்வது அவசியம். அவ்விதம் ஏகாக்ரதா அவஸ்தையை அடைந்தும் மைத்திரியாதி வாஸனைகளால் சமாதானமாகாதவரையில் பிரஸாதத்தை அடையமாட்டாது. ஆகையால் மனது பிரஸாதத்தை அடைந்து துக்கமற்ற சுகத்தை அனுபவிக்கும்படியான உபாயம் தேடவேண்டும். (இதர தெய்வங்கள் பஹிர் விஷயங்களில் ஏற்படக்கூடிய சுகத்தைக் கொடுக்கக்கூடியதாலும் அதனால் ஏற்படும் சுகமும் சாசுவதமில்லாததாலும் அவைகளை உபாஸிப்பதால் மனது பூர்ணானந்தத்தை அடையமாட்டாது.) ஆனந்தரூபமான சக்தியே நாதரூபமாக இருப்பதால் அதை உபாஸித்து அதில் மனதைலயப் படும்படி செய்து உன்மனி என்கிற விருத்தி அற்ற அவஸ்தையை மனது அடையும்படி செய்தால் பூர்ணானந்தம் உண்டாகும்.

2. விஷயம் என்கிற தோட்டத்தில் ஸ்வச்சந்தமாய் சஞ்சாரம் செய்யும் மனது என்றும், மதம்பிடித்த யானையை அடக்கும் அங்குசம் நாதம். ஜன்மாந்தரங்களில் ஏற்பட்டிருக்கும் ஸம்ஸ்கார பலத்தால் உண்டாகும் விருத்திகள் என்கிற அலைகளோடுகூடிய மனது என்னும் சமுத்திரத்தின் வேகத்தையும் அலைகளையும் அடக்கும்கரை நாதம். அதிகவேகமாக சஞ்சரிக்கும் மனதாகிற ஸர்ப்பத்தை அசைவன்னியில் வெளியில் பிரவேசிக்கவொட்டாமல் நிறுத்தி கட்டுப்படுத்தும் கந்தம் நாதம். ஸ்வபாவத்தில் வாஸனையில் ஆசையோடுகூடிய

மனது என்கிற பிரமரம் கந்தத்தை விரும்பாமல் இருக்கும்படி செய்யும் தேன் நாதம். ஆகையால் அநேகவித ஸம்ஸ்காரங்களோடுகூடிய மனது வெளிபதார்த்தத்தில் போகவொட்டாமல் தடுத்து அதிலுள்ள அசுபவாஸனைகளை நசிக்கச்செய்து அதை ஏகாக்ரப்படுத்தி தாபமில்லாமல் சாந்தமாகும்படி செய்து சுத்தமாக்கி ஜலம் பாலுடன் கலப்பதுபோல மனதையிலயிக்கும்படி செய்வது நாதம்.

3. ஸ்வபாவத்தில் தேகத்தில் எல்லாப்பிராணிகளுக்கும் ஏற்படக்கூடிய தேகாபிமானத்தை போக்கடிக்கக்கூடியது நாதம். நாதத்தில் ஆசையுள்ள மான் வேடனிடத்திலிருந்து தன் தேகத்திற்கு நேரிடக்கூடிய அபாயத்தை கவனிக்காமல் நாதத்தில் மனதை லயப்படுத்தி ஸ்தப்தமாக இருக்க நாதத்தில் பிரீதியற்ற வேடன் தன் தேகத்தை விருத்தி செய்து கொள்ள அந்த மானின் மாம்ஸத்தில் ஆசைவைத்து அந்த சமயத்தில் கொன்று விடுகிறான். நாதத்தின் குணத்தை அறியக்கூடிய செவிகள் அற்றவர்களுக்கும் ஆனந்தத்தை உண்டுபண்ணுவது நாதம். செவியில்லாத ஸர்ப்பங்களுக்கு நாதம் ஸந்தோஷம் உண்டுபண்ணுகிறது. செவியுடன்கூடிய மனுஷ்யர்களுக்கு நாதம் சுகத்தை உண்டுபண்ணமாட்டாதா?

4. ஸப்தஸ்வரத்தின் லக்ஷணத்தை அறிந்து அனுபவிக்கும் ஞானம் ரூபம் தனம் வித்யை முதலியவைகளால் ஏற்படும் கௌரவத்தைக் காட்டிலும் ஜாஸ்தி கௌரவத்தைக் கொடுக்கும் பூலோகத்தில் ஸஞ்சாரம் செய்ய ஆவல் கொண்ட நாரதர் ஸஞ்ஜயராஜன் அரண்மனையில் தங்கியிருக்கும் காலத்தில் அவருக்கு சுச்ரூஷை செய்வதற்கு நியமிக்கப்பட்ட தமயந்தி என்கிற ராஜகுமாரத்தி நாரதர் வீணையில் ஸப்தஸ்வரங்களையும் கானம் செய்வதைக் கேட்டு மனமகிழ்ந்து அவரை விவாஹம் செய்து கொள்வதாக நிச்சயித்திருப்பதை அறிந்த ராஜன் அவள் மனதை பலவிதமாக கலக்கியும், அவள் அதை கவனிக்காமலும் நாரதருக்கு சாபத்தால் ஏற்பட்ட மர்கடமுகத்தையும் கவனிக்காமலும் அவரை மணம்புரிந்து அவரால் உபதேசிக்கப்பட்டு நாதத்தை உபாஸித்து நற்கதி அடைந்தாள்.

5. தேகாபிமானத்தையும் லோகானுஷ்டானத்திற்குரிய இதரவ்யவஹாரங்களையும் மறக்கும்படி செய்வது நாதம். பாதிவிருத்யத்தையே சீலமாகக்கொண்ட கோபிகாஸ்திரீகள் ஸ்ரீகிருஷ்ணபகவான் வேணுகானம் செய்வதைக்கேட்டு தங்கள் தேகாபிமானத்தையும் லோக தர்மத்தையும் மறந்து அலங்கோலையாக வந்து நின்றார்கள் என்றும் தாங்களே கிருஷ்ணன் என்று நினைத்து கிருஷ்ணன் செய்த லீலைகளையும் செய்தார்கள் என்றும் பாகவதம் தசம ஸ்கந்தத்திலும், விஷ்ணு புராணத்திலும் சொல்லப்பட்டிருக்கிறது.

6. மனதை இளகச் செய்து அதின் ஸ்வரூபத்தையும் நசிக்கும்படி செய்வது நாதம். ஒரு சமயத்தில் கோலோகத்தில் பிரம்மாதி தேவதைகள் சபைகூடியிருக்கையில் சிவன் ராஸரஸத்தை விருத்திசெய்யும்படியான கானத்தை பாடும்பொழுது ப்ரம்மாதி தேவதைகள் மனோலயமடைந்து மூர்ச்சாவஸ்தை அடைந்தார்கள் ஸ்ரீகிருஷ்ணனும் ராதையும் திரவித்து ஜலரூபமாகிவிட்டார்கள் என்று தேவிபாகவதம் 9-வது ஸ்கந்தம் 12-ம் அத்தியாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது.

7. தொழில்களுக்குரிய வேலைகளை செய்து கிலேசமடைந்த மனதிற்கு விச்ராமம் வரும்படி செய்வதும் வேலை செய்யும் காலத்தில் உண்டான ஸம்ஸ்காரங்களை நசிக்கும்படி செய்வதும், ஒழிவடைந்து சுகப்படும்படி செய்வதும், கானரூபமான நாதம். அந்த காரணத்தை அறிந்துகொண்டு கோவில்களிலும் பூஜாகாலங்களிலும், வாய்மொழியாயும் வாத்தியங்கள்

மூலமாயும் கானம் செய்யும்படி ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தேகத்திற்கும் மனதிற்கும் மூளைக்கும் நேரிட்டிருக்கும் வியாதிகளை போக்கடிக்கக்கூடியது நாதம் என்றும், அதையே வியாதி நிவிருத்திக்கும்மருந்தாக உபயோகப்படுத்தலாம் என்றும் Albert Visetti என்கிற ஐரோப்பிய பாடகர்களில் சிறந்தவர் Musical Times என்கிற ஜர்னலில் எழுதியிருக்கிறார்.

8. நாதம் வர்ணாத்மமாகவும், த்வன்யாத்மாகவும் இருவகை. த்வன்யாத்மகம் ஸப்தஸ்வரங்களாக வியக்தமாகவும் மிருகம் பக்ஷிகள் சப்திக்கும் சப்தமான அவ்யக்தாத்மகமாகவும் இருவகை. அவ்யக்தாத்மகமான சப்தமும் ஸப்தஸ்வரங்களின் லக்ஷணத்தோடு கூடியது என்பது சங்கீத சாஸ்திரத்தின் சித்தாந்தம். வனத்தில் குடியிருந்து தபசு செய்யும் ரிஷிகளும் மிருக பக்ஷிகளின் சப்தத்தில் சங்கீதத்தை அனுபவித்து ஆனந்தமடைகிறார்கள்.. மேற்சொன்ன நாதமே ஈஸ்வரனுடைய ரூபம் ஈஸ்வரனுடைய ரூபத்தைக் கண்களால் பார்ப்பது ஸாத்தியமல்ல. ஆகையால் கருணாநிதியான ஈஸ்வரன் பக்தர்கள் தன் ஸ்வரூபத்தை பார்க்க முடியாமல் வருத்தமடைவார்களே என்கிற கருணையால் சிரவணேந்திரியத்தினால் தன்னை அறிய வேண்டுமென்று நாதரூபத்தை எடுத்துக்கொண்டிருக்கிறார். ஈஸ்வரனுடைய ரூபத்தை ஸாக்ஷாத்தாக கண்களால் தரிசிப்பதைக் காட்டிலும் சிரவணேந்திரியத்தினால் ஈஸ்வரனை அறிந்து அனுபவிப்பது சுலபம். இந்த ரஹஸ்யத்தை அறிந்து முன் காலத்தில் அநேக பக்தர்கள் தங்களுடைய அனுபவத்தையும் தாங்கள் அடைந்த ஞானத்தையும் மற்றவர்களுக்குத் தெரியப்படுத்தி அவர்களுக்கெல்லாம் பக்தியில் ருசி உண்டாக்கவேண்டியதற்காக பக்தர்கள் சுலபமாய் நற்கதி அடைந்ததையும் ஞானிகள் ஞானத்தால் அடையக்கூடாத கதியையும் அவர்கள் அடைந்தார்கள் என்றும் பாடல்கள் மூலமாய் தெரியப்படுத்தி யிருக்கிறார்கள்.

9. மேற்கூறியபடி நாதத்தின் பெருமையை அறிந்த யோகிகள் தங்களுடைய யோக பலத்தால் நாத லக்ஷணத்தை அறிந்து அப்யஸித்து நாத சித்தியையும் அடைந்து ஸாயுஜ்ய பதவியை அடைகிறார்கள்.

காஷ்டங்களில் நெருப்பும் எள்ளில் எண்ணையும் இருப்பதுபோல் நாதம் தேகம் முழுவதும் பரவியிருப்பதை அறிந்து காஷ்டங்களை கடைந்து அக்நி உண்டாக்குவதுபோல் தேகத்திலுள்ள நாதத்தை யோகாப்பியாஸத்தால் அறிகிறார்கள். தேகம் முழுவதும் நாதம் வ்யாபித்திருந்தும் வாஸனு பலத்தினாலும், பிராணசலனத்தினாலும் மனது நாத ஸ்வரூபத்தை அறிய முடியாமல் வருத்தமடைகிறது. பஞ்சபூதங்களின் சேர்க்கையால் ஸ்தூல தேகம் உண்டாயிருக்கிறதென்றும் அறிந்து யமநியமாதிகளால் யோகாப்பியாஸத்திற்கு பிரதிபந்தகமான காம குரோதாதி விருத்திகளை நசிக்கச் செய்து அந்தக்கரணத்தை சுத்திப் படுத்திக்கொண்டு ஸ்திரமாகவும் ஸுகமாகவும் இருக்கவேண்டியதற்கு ஸ்வஸ்திகாதி ஆஸனங்களில் ஒன்றை அப்யாஸப்படுத்தி அதனால் தேகத்திற்கு உண்டாகும் வருத்தத்தை நீக்கவேண்டும். பிறகு மலத்துடன் கூடிய நாடிகளை சுத்தம் செய்வதற்காக பிராணாயாமத்தை அப்யஸித்து இடை பிங்களை என்கிற நாடிகளால் வாயுவை உள்ளே இழுத்து பூரணம் செய்து உதரத்தில் வாயுவை தங்கும்படி செய்து பிறகு வெளிப்படுத்தவேண்டும். இவ்விதமாக பூரக, கும்பக, ரேசக மூலமாய் பிராணாயாமத்தை அப்பியாஸம் செய்வதில் பூரக ரேசக சம்பந்தமில்லாத கேவலகும்பகத்தை மாத்திரம் அப்பியாஸித்து வாயுவை உதிரத்தில் தங்கும்படி செய்யவேண்டும். ஊர்த்வகமனத்தோடு கூடிய பிராண வாயு ஹிருதயத்திற்கு மேலாக ஸஞ்சாரம் செய்யாமல் இருப்பதற்கு மோவாய்கட்டையினால் ஹிருதயத்தை அழுத்தி ஜாலந்தறம் என்கிற பந்தத்தினால் பிராணவாயு மார்க்கத்தை நிரோதம் செய்தால் அது அதோமுகமாகிவிடும். அதோக மனத்தோடுகூடிய அபானவாயுவும், பிராணவாயுவும் வெளிப்படாமலிருப்பதற்கு குதத்தை

மூலபந்தம் என்கிற பந்தத்தினுல் அடைத்துவிட்டால் அபானவாயுவும் ஊர்த்வகமனப்பட்டு பிராணவாயுவுடன் சேருகிறது. இவைகளுடன் கேவலகும்பகத்தினுல் உதிரத்தில் நிறப்பப் பட்ட வாயுவும் சேர்ந்து இடுப்பு முதல் ஹிருதயம் வரையில் உள்ள ஸ்தானமான அக்நி ஸ்தா னத்தில் அக்நியை விருத்தி செய்கிறது. யோக பலத்தால் அவ்விதம் சேர்ந்திருக்கும் வாயுவை வேறு நாடிகளில் செல்லவொட்டாமல் தடுத்தால் இடாபிங்களாவுக்கு மத்தியில் இருக்கும் ஸுஷும்நா நாடியை மறைத்துக்கொண்டிருக்கும் குண்டலிநீ என்கிற சக்தியை சலிக்கும்படி செய்கிறது. வாயுவாலும் அக்நியாலும் கிளப்பப்பட்ட குண்டலிநீ சக்தி ஸுஷும்நா நாடி மார்க்கத்தை துறந்து மேற் கண்ட வாயுவுடன் ஸுஷும்நா நாடியில் பிரவேசிக்கிறது. இவ்வித பிராணுயாமத்தால் நாடி சுத்தமாகிறது. வாஸனு பலத்தால் ஏற்படும் மனதின் விகாரத்தை பிரத்யாஹாரத்தால் போக்கடித்து ஒரே விஷயத்தில் செல்லும்படியான ஏகாக் ரதா அவஸ்தையை தாரணை அப்பியாஸத்தால் சாதிக்கவேண்டும். மனஸ்தைர்யம் ஏற்பட்ட பிறகு பஹிர் விஷயங்களில் மனது செல்லாமல் அந்தர்லக்ஷ்யத்தில் லயப்படும் அவஸ்தை கேசரீ முத்ரை என்பார்கள்.

10. பிராணவாயு குண்டலிநீ சக்தியுடன் ஸுஷும்நா நாடியில் செல்லும் காலத்தில் மூலாதாரம் முதலிய 6 சக்கிரங்களில் பிர்மா, விஷ்ணு, ருத்ரமஹேஸ்வர ஸதாசிவமூர்த்தி களையும் டாகிநீ, ராகிநீ, லாகிநீ, காகிநீ, ஸாகிநீ, ஹாகிநீ என்னும் சக்திகளையும் பிருதி வியாதி 5பூதங்களையும் தத்வங்களையும் முறையே த்யானம் செய்து அவைகளின் லக்ஷணத்தை செம்மையாய் அறிந்து அந்த பலத்தினுல் ஒவ்வொரு சக்கிரத்திலும், மேற் சொன்ன வாயு வைத்தங்கும்படி செய்து ப்ரூமத்யத்திற்கு கொண்டு வரவேண்டும். தேகத்தில் ஆகாச ஸ்தானமாகிய ப்ரூமத்தியத்திற்குமேல் பிராணவாயுவும், அக்நி அம்சமும் மேல் செல்லும் காலத்தில் வாயுவுக்குக் காரணமாகிய நாதத்தில் வாயுலயமடைந்து விடுகிறது. அப் பொழுது நாதம் உண்டாகிறது.

11. சப்தத்தை உண்டுபண்ணும்படியான சக்திகளாகிய வைகரீ, மத்யமா, பச்யந்தீ பரு என்கிற 4 சக்திகளும் குண்டலிநீ சக்தி ஸுஷும்ணுவில் பிரவேசிக்கவே குண்டலிநீ சக்தியோடு மூலாதாரத்தில் வைகரீயும், அநாஹதத்தில் மத்யமாவும், ஆஞ்ஞையில் பச்யந்தி யும் ஸஹஸ்ராரத்தில் பராசக்தியும் சேர்ந்து மேல் செல்லவே நாதம் உண்டாகிறது.

12. மேற்சொல்லிய மூலாதாரம் முதலிய ஆஞ்ஞை வரையிலுள்ள 6 சக்ரங்களிலும் முறையே ஸப்தஸ்வரங்களில் முதல் ஆருகிய ஸ, ரி, க, ம, ப, த என்கிற ஸ்வரங்களுடைய வும் ஸஹஸ்ராரத்தில் ஏழாவதான நிஷாதஸ்வரத்தினுடையவும் ஸ்தானம் இருக்கிறது. இந்த ஏழு ஸ்வரங்களும் மேற்சொன்னபடி வைகரீ முதலிய சப்தோத்பாதக சக்தியுடனும் பிர்மரந் தர ஸ்தானமான ப்ரூமத்யத்திற்குமேல் செல்லும்பொழுது நாதம் உண்டாகும்.

13. நாதம் என்பது வாயுவும் அக்நியும் சேர்ந்து உண்டாவது அந்த நாதம் ஆஹதம் என்றும் அனுஹதம் என்றும் இருவகை ஆஹத நாதமானது ஏற்கனவே நாதபிர்மம் என்கிற உபந்நியாஸத்தில் சொல்லியபடி புருஷ பிரயத்தினத்தினுல் ஆகாசஸ்தானமான விசுத்தி சக்கிரம் இருக்கும் இடமான கழுத்தில் வைகரீரூபமாக வெளிப்படுகிறது. அவ்விதமாகவே தேகத்தில் ஆகாச ஸ்தானமாகிய ப்ரூமத்தியத்திற்குமேல் குண்டலிநீ சக்தியுடன் மேற் சொன்னபடி வாயு சேரவே, நாதம் உண்டாகும்.

14. மேற்சொல்லிய காரணங்களினுல் உண்டாகக்கூடிய நாதமானது நிஹ்ருதிகா என்று பெயர் கொண்ட அவ்யக்த த்வனியோடுகூடியதாகவும் ஸ்வல்ப வர்ணங்களுடன்

கூடிய த்வனிரூபமாயும் வியக்தமாய் பிந்து ரூபமாயும் அர்தேந்து நாதம் மஹாநாதம் என்கிற பெயர்களுடன் விருத்தி அடைகிறது. ஆனந்தம் உண்டாகும் வரையில் வாயுவை பிர்மரந்திரத்தில் நிறுத்த அப்பியாஸம் செய்யவேண்டும். அவ்விதம் மூர்த்தாவில் ஸஞ்சாரம் செய்யும் காலத்தில் வீணாநாதம்போல் சப்தம் உண்டாகும். சிவ சக்தியாத்மகமான அர்த்த நாரீசுவர ஸ்தானமாகிய ஸஹஸ்ராரத்திலும் அதின்மேல் சக்தி ஸ்தானமாகிய பிர்மரந்திரத்திலும் செல்லும்பொழுது வீணாநாதம்போல் சப்தித்து முதலில் சங்கத நாதமும் மத்தியில் மேகநாதமும் கடைசியில் மலை அருவிவிழுவதுபோல நாதமும் உண்டாகிறது என்று யாக்ஞவல்க்யகீதையில் சொல்லப்பட்டிருக்கிறது. மேற்சொல்லியபடி அப்பியாஸம் விருத்தியாகவே நாதம் விருத்தி அடைந்து ஹம்ஸோபநிஷத்தில் சொல்லியபடியும் மண்டல பிராமணோபநிஷத்தில் சொல்லியபடியும் அநேகவிதமாக நாதம் விருத்தி அடைகிறது. அவ்விதம் விருத்தியாகும் காலத்தில் நாதசித்தியைக் காட்டக்கூடிய அடையாளங்கள் தேகத்தில் ஸ்வேதம், கம்பம், பஞ்சனம், பேதனம், சிறக்கம்பம், அமிருத ஸ்ராவம் முதலிய பலவித விகாரங்கள் தோன்றப்படுகிறது.

15. இவ்விதமாய் ஏற்படும் நாதங்களில் மனதைச் செலுத்தாமல் நாதசித்தியை அடைய எத்தனம் செய்யவேண்டும். நாதாபிவியக்தியான பிறகு நாதம் 9 விதமாக விருத்தி அடைகிறது என்றும் ஒவ்வொரு விதசித்தியிலும் ஒவ்வொருவித சக்தி உண்டாகிறதென்றும் சிவபுராணம் உமாஸம்ஹிதா 26-வது அத்யாயத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. கோஷம், காம்ஸ்யம், சிருங்கம், கண்டாவீணை, புல்லாங்குழல், சங்கம், துந்துபி, மேகநாதம் ஆக 9 விதமாக விருத்தி அடைகிறது. முதலில் கோஷம் என்கிற அவ்யக்த நாதம் சித்தித்தால் தேகத்தில் வியாதிகள் நீங்கி வச்யம் ஆகர்ஷணம் என்கிற சக்திகள் உண்டாகிறது. யானையை பாகன்வசப்படுத்துவதுபோல் மனதை வசப்படுத்திக் கொள்ளலாம். இரண்டாவது காம்ஸ்யம் வெங்கலத்தில் உண்டாகும் த்வனிசித்தித்தால் பிராணிகளின் கதியை ஸ்தம்பிக்கச்செய்தும் விஷத்தைப் போக்கடித்தும் பூதகிருஹங்களை கட்டுப்படுத்தவும், சக்தி உண்டாகும். மூன்றுவது சிருங்கம் அப்யாஸிக்க விக்னம் செய்பவர்களை உச்சாடனம் செய்து மாரணம் செய்யும் சக்தியை கொடுக்கும். நான்காவது நாதம் தேவதைகளை பூலோகத்தில் ஆகர்ஷணம் செய்யும்படியான சக்தியை கொடுக்கும். இச்சிக்காத பதார்த்தங்கள் கிடைக்கும். வீணாநாதம் தூரத்திலிருக்கும் வஸ்துவை பார்க்கும்படியான சக்தியையும், வம்சநாதம் எல்லாதத்வங்களையும் அறியும்படியான ஞானத்தையும், மீதிநாதங்கள் இச்சிக்கும் ரூபங்களை எடுத்துக் கொள்ளும்படியான சக்தியையும் மேகநாதம் அப்யாஸிக்கு நேரிடும் அபாயத்தை போக்கடிக்கவும் சக்தியையும் கொடுக்கும். இவ்விதமான நாதங்களைக் கேட்டும் அவைகளில் மனதை செலுத்தாமலும் அவைகளால் உண்டாகும் சக்திகளையும் இச்சிக்காமலும் பிர்மரூபத்தை த்யானம் செய்தால் சித்சக்தியின் பிரஸாதம் உண்டாகி ஈஸ்வரனுக்குறிய சக்தியுடையவனாக ஆகிறான் உன்மனி என்னும் அவஸ்தையை மனது அடைந்த காலத்தில் சுகம் உண்டாகும்படியான மூர்ச்சாவஸ்தை அடைகிறது. ஆத்மாவில் மனது சேருகிறதால் ஆனந்தம் உண்டாகிறது. உன்மனி அவஸ்தை அடையும்படி செய்வது நாதம் அந்த நாதத்தை உபாஸித்தால் லவண கண்டம் ஜலத்தில் கரைந்து விடுவதுபோலும் கற்பூரம் நெருப்பில் லயப்படுவதுபோலும் பிர்மஸ்வரூபமாகிறான்.

Sabda brhmani nishnathah param brhmadhi gatchathi.

16. மேலே சொல்லியபடி கானரூபமான நாதம் சிரவணேந்திரியத்தின் மூலமாய் மனதில் பதிந்து ஸ்தூலதேகத்தில் உள்ள அபிமானத்தை மறக்கும்படி செய்து பிராணவாயு

வேகமாக ஸஞ்சாரம் செய்வதை அடக்கி மனதிற்குறிய சஞ்சல சுபாவத்தை மாற்றி விருத்தி களால் ஏற்படும் வருத்தத்தை நீக்கி மனதை ஒன்று படுத்தி சுத்தமடையும்படியும் சமாதான மாகும்படியாகவும் செய்து மைத்ராதிவாஸனைகளால் இதர பிராணிகளிடத்திலும் அபிமா னத்தை வைத்து ஞானமடைந்து விஞ்ஞானமய கோசத்தை தாண்டி ஆனந்தமயகோசத் தில் லயிக்கும்படி செய்து விடுகிறது.

17. தவிரவும் கானரூபமான நாதம் நவரஸபாவங்களையும் விருத்திசெய்து அன்பை யும் சத்கர்மங்களில் பிரவிருத்தியையும் விருத்தி செய்கிறது. சிருங்கார ரஸத்தை விருத்தி செய்யும் கானங்கள் முதலில் ஸ்தூலதேகத்தில் விகாராதிகளை உண்டுபண்ணினாலும் முடிவில் பிரீதியை விருத்திசெய்யும். இதைப்பற்றி பிந்தி எழுதப்படும்.

மேற்சொல்லிய விஷயங்களைப்பற்றி சொல்லப்பட்டிருக்கிற உபநிஷத் புராண ஸம்ஹிதா முதலிய கிரந்தங்களின் வசனங்கள்.

சிவபுராணம் உமாஸம்ஹிதா 26-வது அத்யாயம்.

ஹம்ஸோபநிஷத் யோகசூடாமணி.

உபநிஷத் யாக்ஞ்யவல்கிய கீதா.

6-வது அத்யாயம் கேறண்டஸம்ஹிதா.



# ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் சரித்திரம்.

*தஞ்சாவூர் வக்கீல் மகா-ள-ள-ஸ்ரீ* **P. V.** *கிருஷ்ணசாமி ஐயர் அவர்களால் படிக்கப்பட்டது.*

உலகத்திலுள்ள எல்லாப் பிராணிகளும் சுகத்தை அடைய இச்சிக்கிறார்கள். அந்த சுகத்தை அடைவதற்குள்ள மார்க்கத்தை தேடவேண்டும். ஒரு பிரதிபிம்பத்தைப் பார்த்து சந்தோஷமடையவேண்டுமானால் அதற்கு காரணமான பிம்பத்தை அலங்கரிக்கவேண்டும் அவ்விதமாகவே, எல்லாப்பிராணிகளான பிரதிபிம்பங்களுக்கும் பிம்பரூபமாய் விளங்கும் ஈசுவரனை ஆராதித்து அவர் ஆனந்தமடையும் பக்ஷத்தில் பிரதிபிம்பங்களான பிராணிகளும் சுகமடைவார்கள். அவ்விதம் பிம்பரூபமான ஈசுவரனை ஆராதிப்பதற்கு பக்தி, ஞானம், யோகம், கர்மம் என்கிற 4 மார்க்கங்கள் உண்டு. அவைகளில், ஞானம், யோகம், கர்மம் இந்த மூன்று மார்க்கங்களைக்காட்டிலும் ஈசுவரனை திருப்திசெய்வதில் பக்திமார்க்கம் சுலபம். மனது ஏகாந்தஅவஸ்தை அடைந்து பிரஸாதம் அடைந்தால் ஒழிய மனது சமாதானப்பட மாட்டாது. பக்திரூபமான ஈசுவர ஆராதனை ஈசுவரனிடத்தில் பிரீதி உண்டுபண்ணி அவர் ரூபமான இதரப் பிராணிகளிடத்திலும் கருணை உண்டாகும் பூத தயை முதலிய சத்குணங்களை அடைந்து மனது சுத்தமாகிவிடும். மற்ற 3 மார்க்கங்களால் மனது சமாதானமடைவது கஷ்டம். ஆகையால், அவ்வித பக்தியை விர்த்திசெய்தால் ஈசுவர அனுக்கிரஹம் பெற்று ஈசுவரனுக்குரிய சக்திகளையும் பெறுகிறான்.

2. அவ்விதம் பக்திசெய்வதற்கு ஸகுணரூபமான மூர்த்திகளில் ஒன்றை தியானம் செய்யவேண்டும். பக்தர்களுடைய அபீஷ்டத்தை நிறைவேற்றுவதில் எல்லா மூர்த்திகளைக்காட்டிலும் ராமமூர்த்தி விசேஷமானது. பாகவதம் 11-வது ஸ்கந்தத்தில்

Thyakhthava sudhusthyaga surêpsitha râjyalakshmîṃ
Dharmishta âryavachasâ yadagâdharanyam
Mâyâmrigam dhayithayêpsitham anvadhâvath
Vandhê mahâpurushathe charanâravindham.

தன் பக்தர்களின் இஷ்டத்தை பூர்த்திசெய்ய தேவதைகள் இச்சிக்கக்கூடிய ராஜ்ஜியத்தையும் தகப்பனார் வசனத்தை காப்பாற்றும்பொருட்டு காட்டிற்குப்போய் மாயாமிருகம் என்று தெரிந்தும் பக்தையான சீதையின் இஷ்டத்தை பூர்த்திசெய்ய அதை துரத்திக்கொண்டு போனார். ஆகையால் அந்த ராமமூர்த்தியை உபாஸித்து அவர் கிருபையால் நாதப்பிர்ம்மத்தின் லக்ஷணத்தை அறிந்து அவைகளால் அடையக்கூடிய சக்தியையும் அடைந்து சுகம் பெறலாம். அவ்விதம் சுகமடைந்த பக்தர்களில் ஒருவரும் நாதப்பிர்ம்மத்தின் அம்சம் என்று சொல்லும்படியான **தியாகராஜஸ்வாமி** சரித்திரத்தை விசாரித்து அதினால் ஏற்படும் ரஹஸ்யங்களை அறியவேண்டும்.

3. பத்மபுராணத்தில் சொல்லியபடி பரமசிவன் தன் பக்தனை நந்திகேசனுக்கு தர்சனம் கொடுத்த இடமாகிய தக்ஷிண கைலாஸம் என்று சொல்லப்படும் பஞ்சநதக்ஷேத்திரத்தில் விவேகமே ரூபமெடுத்துவந்த ராமபிர்ம்மம் என்பவருக்கு சாந்தை என்னும் தர்மபத்னியிடத்தில் உதித்த இரண்டாவது புத்திரன் தியாகராஜஸ்வாமி தகப்பன் தாய் இவர்களுடைய சுச்ரூஷையால் அவர்கள் அனுக்கிரஹம் பெற்ற தியாகராஜஸ்வாமிகள் ஈசுவர

பூஜையில் மிகவும் சிரத்தையுடையவராக பூஜைக்குவேண்டிய சாதனங்களை சம்பாதித்து கொடுத்து தகப்பனருக்கு ஒத்தாசைசெய்து வந்ததில் சத்கர்மத்தில் பிரவிருத்தி உண்டா யிற்று. சத்கர்மத்தில் பிரவிருத்தி உண்டாகவே மனதில் உள்ள துர்வாஸனைகள் நசித்து மனதை ஒன்றுபடுத்தக்கூடிய ஸங்கீதத்தை அப்பியஸிக்கவேண்டுமென்று வெங்கடரமணதா ஸரிடம்சென்று உபதேசம் பெற்றார். அந்த வீணை அப்பியாஸத்தால் மூலாதாரம்முதல் ஆஞ் ஞைவரையிலுள்ள 6 சக்கிரங்களும் அதற்குமேல் 6 சக்கிரங்களும் ஆக த்வாதசாந்தமாகிற 12 சக்கிரங்கள் சுஷும்னு நாடியில் இருப்பதை பஹிரங்கமாக காட்டக்கூடியதற்கு வீணை யில் 12 ஸ்தானங்களை ஏற்படுத்தி இருக்கிறார்கள் என்று அறிந்து மேற்சொன்ன 12 சக் கிரங்களின் லக்ஷணத்தை அறியவேண்டுமென்றும் அதினால் நாதத்தை அறியவேண்டு மென்று நினைத்து யோகாப்பியாஸம் செய்தார். மூலாதாரத்தில் பிரகாசிக்கும் கணபதியை 'கிரிராஜஸுதா என்று ஸ்தோத்திரம் செய்து அவர் அனுக்கிரஹமும் பெற்றார். பஞ்சநதக்ஷேத் திரத்தில் வஸித்த காரணத்தைக்கொண்டு பரமேசுவரரும் தாரக மந்திரத்தை தியானம் செய்கிறார் என்பதை அறிந்து தாரக மந்திரத்தை உபதேசிக்கும்படியான குருவை அடைய வேண்டுமென்று மனதில் ஆவல்கொண்டவராய் குருகிருபை அடைவதை மனதில் தியா னம் செய்ததால் நாரதமஹாமுனிவர் சந்நியாசிவேஷம்கொண்டு தியாகராஜரை சில கீர்த்த னங்கள் பாடும்படி கேட்டுக்கொள்ள அவரும் சந்நியாசி தனக்கு அனுக்கிரஹம் செய்ய நார தர் வந்திருக்கிறார் என்று அறிந்து "ஸ்ரீநாரத நாத ஸரஸீருஹபிருங்க", 'நாரத குரு ஸாமி' முதலிய கீர்த்தனங்கள் பாடவே தன் ஸ்வரூபத்தை அறிந்துகொண்டார் என்று நினைத்து ஸங்கீதார்ணவம் என்கிற கிரந்தத்தை அவரிடம் கொடுத்து அதின் மூலமாய் அனுக்கிரஹித்துவிட்டார். அனுக்கிரஹ பலத்தினால் தியாகராஜருக்கு ஸங்கீத ஞானம் விருத்தி அடைந்து

Sâ bhuddir vimalêndhu sankha dhavalâyâ mâdhawa vyâpinî
Sâ jihvâ mridhu bhâshinî nripa muhuryâ sthauthi nârâyanam.

என்று பத்மபுராணத்திலும்

Sa vâkvisarghô ganathâgha samplavoh yasmin pratislokam abhadhdha vatyapi
Nâmânyananthasya yasônkithâni srinvanthi gayanthi grinanthi sadhawah

பாகவதத்தில் சொல்லியபடியும் ஈசுவரபரமான ஸ்தோத்திரம் செய்வது தான் வாக்கு அடைந்ததற்கு ஸபலம் என்று அறிந்து ராமஸ்தோத்திரம் செய்யத் தொடங்கினார்.

Ramanthê yoghinoh yasmin chidhanandê parâthmani
Ithi Râma padênâsau param brihmâbhi dhîyathê

யோகிகள்கூட ஆனந்தரூபத்தை தியானம்செய்து சுகமடைகிறார்கள். அந்த ரூபம் ராம மந்திரரூபம் என்று நினைத்து ராமபஜனைசெய்ய ஆரம்பித்தார். பக்தி விருத்திஅடையவே மற்றஜனங்கள் விஷயத்தில் சிரமப்படுவதைப் பார்த்து பரிதாபப்பட்டு சூரியன் கிரணங் களினால் ஜனங்களுக்கு பிரகாசம் உண்டாக்குவதுபோல தன் கீர்த்தனங்களால் ஜனங்கள் மனதிலுள்ள அஞ்ஞான இருளை போக்கடித்தார். இவர் பக்திக்கு கட்டுப்பட்ட ராமமூர்த்தி யும் அவரால் குடுபடும் பால் முதலிய பதார்த்தங்களை சுவீகரித்துக்கொள்வார். தன் கானத் தினால் அந்த க்ஷேத்திரத்திலுள்ள எல்லாஜனங்களுக்கும் பக்தியுண்டாக்கி அவர்களுடன்

ஆனந்தமாக காலம்கழிக்கும் காலத்தில் தன் பிராணனுக்குச் சமானமான ராமாதி மூர்த்திகளை தன் தமையன் நதியில் எறிந்துவிடவே ராமமூர்த்தியைக் காணாமல் வருத்தமடைந்து "அந்யாயமு ஸேயகுரா", "எந்துதாகினாடோ", "எந்துகு நிர்தய" முதலிய கீர்த்தனங்களால் பிரலாபித்ததைக்கேட்ட ராமமூர்த்தி தான் இருக்கும் இடத்தை சொப்பனத்தில் தெரியப்படுத்தினார். அந்தக்ஷணமே "ரகுவீர ரணதீர" முதலிய கீர்த்தனங்களைப் பாடினார். தனக்கு அபசாரம்செய்த தன் தமயனிடத்தில் கிருபைகூறி அவருக்கு உபதேசம் செய்தார். பதிவிரதாசிரோமணியான தன் சம்சாரத்தினிடம் தர்மாம்பாள் பேசிக்கொண்டிருந்ததைக் கேட்டு தானும் தரிசனம்செய்ய கருதி போய்ப்பார்க்கையில் அவள் அந்தர்த்தியானமாகிவிட்டாள். அப்பொழுது "அம்ம நிந்நு கந்நதலி" "மந்த கமன" முதலிய கீர்த்தனங்களை பாடினார். தன் சம்சாரம் காலகதியடைந்ததைப் பார்த்து "எ பாமமு சேஸி" முதலிய கீர்த்தனங்களால் விசனப்பட்டார். விஷ்ணுபக்தர்கள் நிர்வாணசுகத்தைக் கூட இச்சிக்கமாட்டார்கள்

Na parilashanthi kêçhithapavarghamapîsvara thê charana
Sarôja hamsakulasangha visrishta grihâh.

என்று சொல்லப்பட்டிருக்கிறது. தஞ்சாவூர் அரசன் தன்னை ஸ்தோத்திரம் செய்ய வேண்டுமென்றும் அதற்காக அநேக திரவியம் கொடுப்பதாகவும் ஆசைவார்த்தை சொன்னதைக்கேட்டு ராமனை ஸ்தோத்திரஞ்செய்த நாவினால் மனுஷனை ஸ்தோத்திரம் செய்யக் கூடுமாவென்று சொல்லி மருதலித்துவிட்டார். திருப்பதிக்குப்போய் வெங்கடரமணனை தர்சிக்கமுடியாமல் வருத்தப்படவே "தெரதீயகராதா" என்கிற கீர்த்தனத்தால் அவர் தர்சனமடைந்து "வெங்கடேசா" என்கிற கீர்த்தனம் பாடினார். சுந்திர முதலியார் என்பவர் இவர் பக்தியைப்பார்த்து இவருக்கு தனத்தில் ஆசை இருக்கமாட்டாதென்று நினைத்து இவர் உட்காரும் பல்லக்கில் அநேக திரவியங்களை வைத்து அனுப்பவே அவர் காட்டுமார்க்கமாய் வரும் காலத்தில் தனத்தை அபகரிக்கத் திருடர்கள் வருவதைப்பார்த்து பகவானைநினைத்து "முந்துவே நுக", "ரகுவர" என்று கீர்த்தனங்களைப் பாடினார். ஸ்ரீராமன் ராம லக்ஷ்மண மூர்த்தி ரூபங்கொண்டு பல்லக்குரக்ஷகர்களாக பல்லக்குடன் வருகையில் திருடர்களின் உபத்திரவத்தை நீக்க அவர்களை பாணத்தினால் துரத்தினார். பொழுதுவிடியவே மறைந்தார். ஸ்ரீராமன் தன்னைக் காப்பாற்றினார் என்று திருடர்களால் சொல்லப்பட்ட தியாகராஜர் "ராம பாண" "வாசாம கோசர" என்கிற கீர்த்தனங்களைப் பாடினார். வரும் வழியில் ஒரு பிராமணனும் அவர் ஸம்ஸாரமும் பிள்ளைகளும் இராவில் தங்க இடமில்லாமல் கோவிலுக்குள் புகுந்து உள்ளேபோக எத்தனப்பட்ட காலத்தில் பிராமணன் கிணற்றில் விழுந்து இறந்துவிட்டான். அவர் ஸம்ஸாரம் மனம் வருந்துவதை அறிந்த சுவாமிகள் பிராமணன் கழுத்தில் துளசிமாலை இருப்பதைப் பார்த்து "நா ஜீவாதார" என்று பிரார்த்திக்க ராமகிருபையினால் பிராமணனை ஜீவிக்கும்படி செய்தார். பிறகு ஸ்ரீரங்கக்ஷேத்திரத்திற்குப் போய் "ஓ ரங்சாயீ" முதலிய கீர்த்தனங்களைப் பாடினார். இவ்விதமாக அநேக கீர்த்தனங்களையும் ப்ரஹ்லாத விஜயம், நௌகா சரித்ரம் என்னும் கிர்த்தனங்களையும்செய்து 88-வது வயதில் "ஞானமோசகராதா" என்கிற கீர்த்தனத்தினால் மோக்ஷம் அளிக்க வேண்டுமென்று மனங்கரைந்து பாடினார். ஸ்ரீராமன் பிரஸன்னமாகி அவருக்கு தர்சனம் கொடுத்து நீ ஸந்நியாஸம் செய்துகொள் மோக்ஷபதவியைக் கொடுக்கிறேன் என்று சொல்லவே தான் ஸந்நியாஸ ஆச்ரமத்தை அடைந்து தேகாபிமானத்தைவிட்டு யோகத்தில் மனதைச் செலுத்தி பிராணவாயுவை கும்பகமூலமாக ஸுஷும்னையில் குண்டலியுடன் பிரவேசிக்கச்செய்து மூலாதாரம் முதலிய 6 சக்கிரங்களிலும் பிராணவாயுவை நிறுத்தி மேலாக பிராணவாயுவைச்செலுத்தி ஸஹஸ்ராரத்திலிருந்து ப்ரமரந்திரத்திற்கு பிராணவாயுவைக் கொண்டுபோய் அதிலிருந்தும் ஜோதிஸ்வரூபமாய் வெளிப்பட்டு நாத ப்ரம்மத்துடன் கலி 4948-ம் வருஷம் பராபவ புஷ்ய பகுள பஞ்சமி திதியில் லயமடைந்தார். அந்த பக்த சிரோமணியால் செய்யப்பட்ட கீர்த்தனங்கள் மூலமாய் ஸங்கீத சாஸ்திரத்திற்கு ஒத்தாசைசெய்துகொண்டும் ஸூக்ஷ்மரூபமாய் ஸங்கீத ஸபைகளில் பிரகாசித்துக் கொண்டுமிருக்கிறார்.

# ஐரோப்பிய ஸங்கீத சரித்திரமும் அதின் சில அம்சங்களும்.

மகா-ளா-ளா-ஸ்ரீ A. G. பிச்சைமுத்து B. A., L. T., அவர்களால் படிக்கப்பட்டது.

ஐரோப்பிய சங்கீதமானது, சிறிய ஆரம்பத்தினின்றும் ஒரு சிறு வித்துப்போல் தோன்றி, வேரூன்றிக் கிளைத்து மரமாகி, உலகமெங்கும் பரவி, தற்காலம் நாகரீகமும், கல்வியும், செல்வமும் உலகில் எங்கெங்கே யுண்டோ அவ்விடங்களெல்லாம் பரவி விசாலித்து நிற்கிறது. கடவுள் மானிடருக்கு அருளிய சிலாக்கியங்களில் ஸங்கீதம் பாடுவதும் கேட்பதும் மனசுக்கு ஆனந்தத்தை விளைவிக்கும் அருங்கருவிகளில் முக்கியமானது என்பதை யாவரும் ஒப்புக்கொள்வார்கள். பக்தன் பரவசமாவதும், ஈசன் இரக்கங்கொள்வதும், குழந்தை குரல் ஓய்வதும், கூனன் கூத்தாடுவதும், கிழவன் கிண்ணாரம் வாசிப்பதும், துன்பத்தின் மத்தியில் மனசுக்கு இன்பம் சுரப்பதும் ஸங்கீதத்தின் மகிமையே.

ஸங்கீதமானது ஆதியில் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரம்மத்திலிருந்து உற்பத்தியானதென்றும், வீணை என்னும் சிரேஷ்ட வாத்தியமானது இந்திரலோகத்திலிருந்து நாரதரால் இவ்வுலகுக்குக் கொண்டுவரப்பட்டது எனறும் இந்திய ஸங்கீத நூல்கள் கூறுவதுபோல், ஐரோப்பிய ஸங்கீத ஆரம்பத்தைப் பேசும் நூல்களும் சொல்லுகின்றன. என்றாலும் எல்லா ஈவுகளும் கடவுளிடத்திலிருந்து மனிதருக்கு அருளப்படுவதால் ஸங்கீதம் தேவலோகத்திலிருந்து வந்திருக்கவேண்டும் என்று ஒப்புக்கொள்ள ஒருவரும் தடை சொல்ல மாட்டார்கள். இப்போது ஐரோப்பிய ஸங்கீத ஆரம்பத்தைப் பார்க்கலாம்.

இவ்வுலகில் ஏதேது மகிமையானதோ, ஏதேது கண்ணியமானதோ, ஏதேது பிரயோசனமானதோ, ஏதேது பழமையானதோ அவை கீழக்கண்டமாகிய ஆசியா கண்டத்தில் உற்பத்தியானவை யென்றும் மேலக்கண்டமாகிய ஐரோப்பாவில் அவை பூரணமாயினவென்றும் சரித்திரங்கள் கூறுகின்றன. எல்லா மதங்களுக்கும் உறைவிடம் ஆசியா கண்டமே. எல்லா வியாபாரங்களுக்கும் ஆதியுற்பத்தி ஸ்தலம் ஆசியா கண்டமே. எல்லாவித சாஸ்திரங்களுக்கும் உற்பத்தி பூமி ஆசியா கண்டமே. எல்லாவித விசித்திர வேலைகளுக்கும் ஆதியில் பேர்வாங்கினது ஆசியா கண்டமே. அவ்விதமே எல்லா ஸங்கீதமும் உற்பத்தியானது இந்தக் கண்டத்திலேயே. ஆதியில் அதிகப் பிரக்யாதிபெற்றிருந்த ராஜ்யங்களாகிய அசீரியா, கல்தேயா, இஸரவேல் யூதராஜ்யங்கள், எகிப்து இந்தியா லங்கை என்னும் இராஜ்யம் ஆகிய இவைகளில் முதல் முதல் ஸங்கீதம் உற்பத்தியானதாகச் சரித்திரங்கள் மூலமாய் அறிகிறோம் .கதிரவன் தன் கிரணங்களைக் கிழக்கிலிருந்து மேற்கே வீசுமாப்போல ஸங்கீதமும் கிழக்கில் ஆரம்பித்து மேற்கு பக்கம் பரவினது. இந்தக் கீழ்ராஜ்யங்களிலிருந்து மேல்ராஜ்யங்களாகிய கிரேக்கு, உரோமை முதலிய இராஜ்யங்களுக்கு அது கொண்டு போகப்பட்டது. ஐரோப்பாவில் முக்கியதேசங்களாகிய இத்தலி, ஜர்மனி, பிரான்ஸ், இங்கிலாந்து முதலிய தேசங்களில் ஐரோப்பிய ஸங்கீதம் பூரணம் பெற்றது.

நாம் ஐரோப்பிய ஸங்கீதத்தைப்பற்றி, பாரம்பரையை ஒழித்து ரெக்கார்டுகள் தோன்றிய காலத்தை எடுத்துக்கொண்டால், முதல் முதல் கி. பி. 300-ம் வருஷத்தில் ஒருவித துவக்கத்தைக் காண்கிறோம். இக்காலத்தில் ஐரோப்பிய ஸங்கீதமானது, நம் இந்திய ஸங்கீதத்தைப் போலவே, தனி ஸ்வரங்களால் ஆனதாய் மாத்திரம் இருந்தது ஆறே

ஆறுஸ்வரங்கள்தான். நிஷாதம் கிடையாது. நம்முடைய ஸங்கீதத்தில் ஆரோகண அவரோகணங்களை ஆதாரமாய் வைத்து இராகங்களை ஜெனிப்பிப்பது போல் முதலில் நாலே நாலு விதமான scales இருந்தது. பிறகு 3 சேர்க்கப்பட்டது. 7 விதமான ஆரோகண அவரோகணங்கள் இருந்தன. அவைகளுக்கு மோட்ஸ் (modes) என்று பெயர். இந்த 7 modes களும் சுத்தஸ்வரங்களால் ஆனவை. அவை நம்முடைய தோடி, கரகரப்பிரியா, தீரசங்கராபரணம், நடபைரவி, ஹரிகாம்போதி, கல்யாணி ஆகிய இந்த இராகங்களின் ஆரோகண அவரோகணங்களே. இராகங்கள் உண்டாக்கும் முறையும் நம்முடைய முறை போலவே இருந்தது. ஆகையால் ஸங்கீதமெல்லாம் ஒரேயிடத்திலிருந்து உற்பத்தியாயிருக்கவேண்டுமென்று நினைக்க ஏதுவுண்டு. ஆதியில் வழங்கி வந்த வாத்தியங்களைக் கவனித்தால், lute, harp என்ற தந்திவாத்தியம், flute, trumpet என்ற ஊதும் வாத்தியங்களும், பேரிகை தம்புரு முதலிய கொட்டுகளும் பழக்கத்திலிருந்தபோதிலும் தந்தியால் ஆன வாத்தியங்களே விசேஷமாய் கீதவாத்தியங்கள் என்று அழைக்கப்பட்டதாக அறிகிரோம்.

பிறகு கி. பி. 1000-ம் வருஷத்தில் பார்த்தால், உபயோகத்தில் இருந்த கீர்த்தனங்கள் சுத்தஸ்வரங்களால் ஆனவையாதலாலும், அதிக மாறுதலில்லாமல் சொன்னதையே திரும்பிச் சொல்வதுபோல் இருந்ததாலும், இராகங்களை விந்யாசப்படுத்துவதற்குவேண்டிய திறமை யில்லாததாலும், ஒரு இராகத்தையே ஒருவர் சட்ஜமத்திலும் ஒருவர் பஞ்சமத்திலும் ஆரம்பித்து படித்துப் பார்த்தார்கள். இவ்விதமாய் இரண்டு வித்தியாஸமான ஸ்வரங்களை ஏக காலத்தில் பாடும் முறை உண்டாயிற்று. இதற்கு diaphony என்று பெயர் கொடுத்தார்கள். இப்போது அவ்விதமாய் ஒரு இராகத்தைப் பாடிப்பார்ப்பீர்களானல் அது ஸங்கீதம் போல் இராமல் காதுக்கு நாராசம் போல் இருக்கும். இவ்விதக்கேவல harmony ஏறக்குறைய 300 வருஷங்களாக உபயோகத்தில் இருந்து வந்தது.

அப்புறம் சுமார் கி. பி. 1300-ம் வருஷத்தில்தான் four part harmony அதாவது ஒரு ஸ்வரத்துக்கு அனுஸ்வரமாக வேறு மூன்று ஸ்வரங்களைச்சேர்த்து ஏக காலத்தில் பாடும் வழக்கம் உண்டானது. இந்த விதமாகப் பாடுவதுதான் ஐரோப்பிய ஸங்கீதத்தின் மகிமை யென்று நாகரீகமுள்ள எல்லா ஜாதியாராலும் கொண்டாடப்பட்டுவருகிறது. ஆகிலும், இந்த harmony விதமும் தற்காலம் வழங்கிவரும் முறைமைகளின்படி உண்டான elaborate (அதாவது சிக்குமுக்குள்ள) harmony ஆய் இராமல், வெறும் சுத்தஸ்வரங்களை அடுக்கிச் சொல்வதினுல் உண்டான ஒரு லேசான முறையாயிருந்தது. இப்போது வழங்கிவரும் harmony முறையானது ஏறக்குறைய 150 வருஷங்களுக்கு முன் உண்டானது தான்.

அப்படியே வாத்தியங்களிலும் பழையன அதிகம் கழிந்துபோய் புதுவாத்தியங்களை உண்டுபண்ணினது ஒரு 150 வருஷங்களுக்குள் தான். Organ, piano, viola, violoncello, clarinette, horn என்ற இந்த வாத்தியங்கள் அதிகமாய் உபயோகத்துக்கு வந்தபிறகு தான் வாத்தியங்களுக்கென்று விசேஷித்து எழுதப்பட்ட ஸங்கீதமும் பூரணத்திற்கு வந்தது. ஆங்கிலேய ஸங்கீதத்தைப்பற்றி நம் சிநேகிதருக்கு விளங்கும்படியாய் சில வார்த்தைகளை மாத்திரம் சொன்னேன். அதிகமாய் அறியவேண்டுமென்று விரும்புவோர்கள் என்னிடம் கேட்டால் சொல்லத் தயாராயிருக்கிறேன்.

நம்முடைய சிநேகிதரில் அநேகர் ஐரோப்பிய ஸங்கீதத்திற்கும் இந்திய ஸங்கீதத்திற்கும் உள்ள வித்தியாஸமென்ன? இரண்டில் எது சிரேஷ்டம் என்று என்னை அநேகந்தரம்

கேட்டிருக்கிறார்கள். இதற்கு உத்தரவு சொல்லுவது வெகு கஷ்டமென்றாலும், சில வார்த்தைகள் சொல்லுகிறேன். இதில் முதற்கேள்விக்கு முதலில் உத்தரம் சொல்லுகிறேன்.

## இரண்டு ஸங்கீதத்துக்குமுள்ள வித்தியாஸம்.

(i) இரண்டு ஸங்கீத சாஸ்திரத்திலும் ஆரம்பத்தில் melody ஐயே உபயோகித்து வந்ததாகத் தெரிகிறது. அதாவது தனி ஸ்வரங்களையே ஒன்றின்பின் ஒன்றாய் முறைப்படி சொல்லுவது. இந்திய ஸங்கீதம் இந்த மெலடியையே விசேஷித்துப் பெருக்கமாக்கி, ஒரு இராகத்தை எத்தனை விதமாய் விந்யாசப்படுத்திக் காண்பிக்கக்கூடியதோ அவை யாவற்றையும் செய்து, ஒரு கரைகாண அரிதான அகண்ட ஸமுத்திரம்போல் வியாபித்து நிற்கிறது. ஐரோப்பிய ஸங்கீதமோ, melody ஐ அவ்வளவு தூரம் பெருக்காமல், அதைக் கூடிய வரையில் எளிதில் பாடக்கூடிய சுத்தஸ்வரங்களாக வைத்துக்கொண்டு, harmony விஷயமாய், அதாவது பல அனுஸ்வரங்களை ஏக காலத்தில் முறைப்படி யமைத்துப்பாடும் வித்தையைப் பெருக்கமாக்கி, ஒரு வித்வான் காட்டக்கூடிய திறமையை யெல்லாம் அதில் காண்பிக்க இடம் ஏற்று, நீந்திக் கரையேறுவதற்கரிதான ஆழமான ஸமுத்திரம்போல் ஆழ்ந்து நிற்கிறது. இந்திய ஸங்கீதம் பரப்பளவு அறியமுடியாத பசிபிக் மகா ஸமுத்திரம் என்று வைத்துக்கொண்டால், ஐரோப்பிய ஸங்கீதமானது ஆழமறியமுடியாத அத்லாந்திக் மகா ஸமுத்திரம் என்று சொல்லலாம்.

(ii) இரண்டாவது, இந்திய ஸங்கீதத்தில் அலுக்குக்குலுக்குகள் அதிகம் இருப்பதால், அது சாரீரத்தை யழகாய்ப் பேசப் பழக்கிய சிலரால் மாத்திரம் பாடப்படக்கூடியதாய் இருக்கிறது. ஐரோப்பிய ஸங்கீதமோ யாவரும் எளிதில் பாடலாம். ஆண், பெண், சிறியோர், பெரியோர், முதியோர், வாலிபர் ஆகிய யாரும் பாடலாம். சாரீரத்துக்குத் தகுந்த ஸங்கீதம் இதில் உண்டு. ஸ்திரீகளின் உயர்ந்த சாரீரத்துக்கும் தாழ்ந்த சாரீரத்துக்கும் தகுந்த விதமாயும், புருஷாளுடைய உயர்ந்த தாழ்ந்த சாரீரத்துக்குத் தகுந்த விதமாயும் ஸங்கீதம் அமைக்கப்படுகிறது. ஒரு குடும்பத்தில் ஒரு புருஷனும், பெண்சாதியும், இரண்டு பிள்ளைகளும் இருந்தால் அவரவர் சாரீரத்துக்கு ஏற்க treble, alto, tenor, bass என்ற நாலு சாரீரங்களும் ஒன்று சேர்ந்த ஒரு கீர்த்தனத்தை இனிமையான harmonyல் பாடலாம்.

(iii) இந்திய ஸங்கீதமெல்லாம் பாட்டிற்கென்று அமைக்கப்பட்டிருக்கிறதேயல்லாமல் வாத்தியங்களுக்கென்று அமைக்கப்படவில்லை. அதாவது எதேதை வாத்தியங்களில் வாசிக்கிறோமோ அதை பாடியும் காண்பிக்கலாம். ஐரோப்பிய ஸங்கீதம் அப்படியல்ல. வாய்ப்பாட்டு ஸங்கீதம் வேறே, வாத்திய ஸங்கீதம் வேறே. Vocal music என்றும் instrumental music என்றும் வித்தியாஸம் உண்டு. ஒரு கீர்த்தனத்தை $2\frac{1}{2}$ அல்லது 3 ஸ்தாயிக்குமேல் சாதிப்பது கஷ்டம். ஆகையால் அத்தனை ஸ்தாயிக்குமேல் பாட்டுக்குறிய ஸங்கீதம் எழுதுகிறதில்லை. ஆனால் இங்கிலீஷ் வாத்தியங்கள் ஏழு அல்லது எட்டு ஸ்தாயிவரை ஏற்குமாதலால் ஸங்கீதமும் அதற்குத் தகுந்தாற்போல் எழுதியிருக்கும். அதுவுமல்லாமல் வெவ்வேறு வாத்தியத்திற்கும் வெவ்வேறு ஸங்கீதம் உண்டு. piano music, organ music, violin music, giutar music, mandoline music என்ற பல உண்டு. இங்கிலீஷ் ஸங்கீதத்தின் விஸ்தாரம் தெரியவேண்டுமானால் அதை வாத்தியங்களில் கேட்கவேண்டும்.

(iv) இந்திய ஸங்கீதத்தில் ஆரோகண அவரோகணங்கள் கொடுத்துவிட்டால் அப்புறம் சுத்தஸ்வரங்களைவிட்டு அப்புறம் இப்புறம் அசையக்கூடாது. மற்ற ஸ்வரம் வந்துவிட்டால் குற்றம் என்றும் தேசிகம் என்றும் கொள்ளப்படுகிறது. ஐரோப்பிய ஸங்கீதத்தில் அப்படியல்ல. எல்லா ஸங்கீதமும் கொடுத்த ஆரோகண அவரோகணத்தில் தொடங்கி அதிலேயே விசேஷமாய் முடியவேண்டும். ஸங்கீதம் ஆரம்பிக்கும் எவ்வொரு சிஷ்யனும் அப்படியே செய்கிறான். ஆனால் அதை விட்டு அவன் எப்போது வெளியே புறப்படப் படிக்கிறானோ அப்போதுதான் அவனுடைய தேர்ச்சி ஆரம்பிக்கிறதென்று சொல்ல வேண்டும். ஒவ்வொரு ஆரோகண அவரோகணத்துக்கும் அனுசரணையான நாலைந்து அவரோகண ஆரோகணங்கள் உண்டு. கொடுத்த scale ஐ விட்டு மற்ற அனுசரணையானவைகளில் இரண்டு மூன்றுக்குப்போய்த் திரும்பி வருபவனே வித்வான். இப்படிப் பல scalesக்கும் போவதற்கு modulation என்று பெயர். அதாவது, அனுசரணையான ஆரோகண உபயோகம். ஒரு சிறு உதாரணம் சொல்லிக் காண்பிக்கிறேன். இங்கிலீஷில் ஒரு சிறு கீதம் எடுத்துக்கொள்கிறேன். இதை நீங்கள் பாடக்கேட்டால் எப்படி ஆரோகணங்கள் மாறிக்கொண்டுவருகிறது என்பதை நீங்கள் லேசில் அறிவீர்கள்.

If in the Sum-mer morn, dear, You wand-er a-mid the flowers
ச மா ப த நீ சா மா பா த ப மா த பா
If you feel Sad and lone dear, Think-ing of past glad hours
ச மா ப தா நீ சா மா தா ப ம பா த மா
} நடபைரவி or தோடி

Just whis-per my name to the wood-lands, Sigh what your heart ud say,
நீ சா ச ச சா நி த சா நீ நி ம ப த நி தா பா
I know I shall hear thy mess-age dear, borne on the breeze a way
ப சா ச ச சா ச சா நீ நீ, த நீ ச நீ த ரீ
} சங்கராபரணம்

O winds that blow from the south, sighing so soft and low
ப பா ப தா ப க பா ச நி த பா த நீ

Whis-per your sec-ret sweet, whis-per and I shall know
பா ப ப தா ப பா ரீ ரி ச நீ த தா பா

O winds that blow from the south, Breathe in my list-ening ear
ப பா ப தா பா க பா தா த த நீ த தா ரீ

Come from the heart of my love, whis-per and I shall hear
ம க ரி ச த ச சா பா ப த நி ரீ ப சா

(இங்கே கீதம்பாடிக் காட்டப்பட்டது.)

இதுவே இங்கிலீஷ் ஸங்கீதத்தின் லக்ஷணம்.

இப்போது இரண்டாவது கேள்வியை எடுத்துக்கொள்வோம். இரண்டில் எது அதிக இலக்ஷணமுள்ளது. இது முதல்கேள்வியைவிட கஷ்டம். ஸரஸ்வதி என்ற தாயானவள், மோகனம் குதூகலம் என்று பேர்கொண்ட இரட்டைப் பெண்களைப் பெற்றாளாம். குதூகலத்தைச் சேர்ந்தவர்கள் அவள் அழகுக்கு நிகர் மூவுலகிலும் இல்லை என்றும், மோகனத்தைச் சேர்ந்தவர்கள் அவள் அழகு சந்திரனையும் பழிக்குமென்றும் சொல்லிக்கொண்டால் எப்படியிருக்குமோ அப்படியே தற்காலம் ஸங்கீதவிஷயமும் இருக்கிறது. ஸங்கீதம், இப்போது

வியாபாரத்துக்குரிய ஒரு சரக்கைப்போல் ஆய்விட்டபடியால் ஒவ்வொருவரும் தன் சரக்கே விசேஷம் என்று சொல்லத் துணிந்துவிட்டார்கள். அருமையான ஸங்கீதம் இந்தப் பரிதாபமான நிலைமைக்கு வந்துவிட்டது. ஆனால் நாகரீகமுள்ள எவரும் இப்படிச் சொல்ல மாட்டார்கள். இந்திய ஸங்கீதத்தை ஒருநாளும் கேட்டிராத ஐரோப்பியன் ஒருவன் இந்தச் ஸங்கீதத்தை முதலில் கேட்கும்போது "இது என்ன! வலிப்பு வந்தாற்போல் இழுத்துக் கொண்டு போகிறதே" யென்றும், ஐரோப்பிய ஸங்கீதத்தை முதலில் கேட்கும் ஓர் இந்தியன் "இது என்ன! ஆளுக்கு ஓர் மூலையில் ஓ ஓ என்று கத்துகிறதே" என்றும் சொல்வதை நாம் கேட்டிருக்கிறோம். இதற்குக் காரணங்கள் அநேகம் உண்டு (i) அறியாமையே காரணம், அறியாமையே காரணம் (ii) தன்னிலுள்ள அறியாமையை அறியாமல் இருப்பதே மற்றொரு காரணம் (iii) இன்னொரு காரணம் மமதை. ஐரோப்பியன் ஒருவன் இந்திய ஸங்கீதத்தைக்கேட்டு முன்னதாகவே அதில் ஒன்றுமில்லை யென்று நினைத்துக் கொண்டால் இதிலுள்ள சுகம் அவனுக்கு எப்படித் தெரியும்! அல்லது Harmony என்றால் என்னவென்று தெரியாத இந்தியன் ஒருவன் தன்னுடைய ஸங்கீதத்திற்கு நிகர வேறொன்றும் இல்லை என்று மனதில் எண்ணிக்கொண்டால் இங்கிலீஷ் ஸங்கீதம் அவன் காதில் எப்படி நுழையும் (iv) அப்பியாஸமில்லாமை இன்னொரு காரணம். இந்தியர்கள் இங்கிலீஷ் ஸங்கீதத்தையும் ஐரோப்பியர் இந்திய ஸங்கீதத்தையும் அடிக்கடி கேட்கவேண்டும். அப்போது அவர்களுக்கு மற்றதின் அருமைதெரிந்து அதை விசேஷிக்க இடமுண்டாகும். நமக்குள்ளும் பிரம்மஸ்ரீ வீணை வெங்கடரமணதாஸ் அவர் வீணைவாசிக்க, பஞ்சாபிகேச பாகவதரவர்கள் Fiddle வாசிக்க, பட்டணம் ஸுப்பிரமணியரவர்கள் பாட, முத்தையா பாகவதரவர்கள் கோட்வாத்தியம் வாசிக்க, நாராயணப்பா மிருதங்கம் வாசிக்க இப்பேர்ப்பட்ட ஸபையில் ஒருவன் உட்கார்ந்து இன்பத்தை அனுபவிக்கும் சிலாக்கியத்தைப் பெறுவானாகில் அவனுக்குப் பகல் இரவேது பசி தாகமேது ஊண் உறக்கமேது? லண்டன் மாநகரில் Albert Hall என்ற இடத்தில் 2000 வாத்தியங்கள் ஒரு ஸங்கீதத்தை ஏக காலத்தில் வாசிக்க 2000 பாடகர்கள் அதை ஏகோபித்துப்பாடக் கேட்கும் சிலாக்கியத்தை ஒருவன் பெற்றால் அவன் "கர்த்தா! இது பூலோகமோ? பரலோகமோ? பரதீசா?" என்று கேட்பான் என்பதற்குச் சந்தேகமில்லை.

அப்பேர்ப்பட்ட கச்சேரியைக் கேட்கக்கூடிய சிலாக்கியம் நமக்கு இல்லாமற்போகவில்லை. அப்படி ஒரு கச்சேரி இந்த இடத்தில் நடக்குமானால், காலஞ்சென்றுபோன தியாகய்யர், தீட்சதர் அவர்கள், க்ஷேத்திரியர் அவர்கள், சாமா சாஸ்திரி, மகாவைத்தினாதய்யர் முதலிய மகான்களின் ஆவிகள் நம்மைச்சுற்றிலும் இந்தக் காலரியில் பிரசன்னமாகி, ஆகா! நாம் விட்டுப்போன கர்நாடக ஸங்கீதம் இன்னும் நம்முடைய பின்னடியாரால் இவ்வளவு மகிமையாக, இவ்வளவு திரமான ஸ்திதியில் வைத்து கொண்டாடப்பட்டுவருகிறதே என்று கண்டு அகமகிழ்வார்கள் என்பதற்குச் சந்தேகமில்லை. அப்பேர்ப்பட்ட கச்சேரிகளை நாம் அடிக்கடி அனுபவிக்கும் சிலாக்கியத்தைக் கடவுள் நமக்கு அனுக்கிரகிப்பாராக.

கடைசியாக ஐரோப்பிய ஸங்கீதத்தின் விசேஷத்தைக் சொல்லக்கேட்ட கனவான்களாகிய தாங்கள் அதை அடிக்கடிகேட்டு அதிலுள்ள அழகை அறியக்கூடிய திறமையை அடையும்படி உங்களை வெகுவாய்க் கேட்டுக்கொள்ளுகிறேன். இதற்காக அதிகதூரம் போகவேண்டியதில்லை. பிரெசிடெண்டவர்களின் வீடே எல்லாவித ஸங்கீதத்துக்கும் உறைவிடம்.

## தாளவிசாரணை

தஞ்சாவூர் கல்யாணஸுந்தரம் ஹைஸ்கூல் ஸம்ஸ்கிருத பண்டிதர் பிரம்மஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரியாரவர்களால் படிக்கப்பட்டது :—

நண்பர்களே!

நமது அத்துவைத சாஸ்திரக் கிரந்தங்களில் அநாதிப் பொருள்கள் ஆறெனக் கூறியிருக்கிறது. அவற்றுள் காலம் என்பதும் ஒன்று. அதை அவித்யைக்கும் சித்துக்குமுள்ள ஸம்பந்தமென்பார்கள். இங்கு அவித்யை என்றது சக்தியையும் சித்தென்றது சிவனையுமாம். அச்சிவன் சக்தியுடன் கூடியிருந்தாலன்றி சராசரப்பிரபஞ்சங்களனைத்தும் தன்னிடம் அடிக்கடி தோன்றி இருந்து அழிவதற்கு இடம்பாடில்லை. இக்கருத்தைத்தான்

'Sivaḥ saktyâ yukto yadi bhavati saktaḥ prabhavituṃ
na chedevaṃ devo na khalu kusalaḥ spanditumapi.'

என்னுமிடத்தில் ஸ்ரீமத்சங்கராசாரியாரவர்கள் வெளியிட்டிருக்கின்றனர். எல்லாவற்றிற்கும் காலமே ஆதாரமென்பது தார்க்கிகர்களின் துணிபு. ஆகவே காலமென்பது பிரகிருதி என்னும் சக்தி அகண்டாகாரமான பிரமமாகிய சிவனது ஸந்நிதியில் தொழிற் பட்டுக்கொண்டிருத்தலால் தோன்றும் பிரம்மஸ்வரூபமேயாகின்றது. ஒரு ஜீவநதியின் பிரவாஹத்தைப் போல் அநாதியாய்த் தொழிற்பட்டு வருகிற பிரகிருதியை நேரில் பார்க்க நம்மைப் போன்றவர்களுக்குச் சக்தியில்லை. நமது பஞ்சேந்திரியங்களுக்குப் புலப்படுவதெல்லாம் ஆங்காங்கு கண்டங்கண்டமாய்த் தோன்றும் பிரகிருதி பரிணாமங்களே. ஆகவே அப்பரிணாமங்களின் தொழிற்பாடுகளால் நமது மானஸப் பிரத்தியக்ஷத்திற்கு வரக்கூடிய காலம் கண்டமேயாகும். இப்படிக்குக் கண்டமான காலத்தை நாம் அபரோக்ஷப்படுத்தப் பழக்கினால் இப்பரிணாமங்களது உபாதானகாரணமாகிய பிரகிருதியை உற்று நோக்குதற்குச் சிறுகச்சிறுக சக்தி உண்டாகி அதன் மூலமாய் அகண்டமான காலத்தையும் அபரோக்ஷப் படுத்தலாம். அதுவே பிரம்மஸாக்ஷாத்காரத்திற்கு உற்ற உபாயமாகும்.

நாம் ஒரு பொருளின் நீளம் அகலம் உயரம் இவற்றை அளக்கும் போதெல்லாம் அப்பொருள் எத்தனை கன அளவுள்ள ஆகாசத்தை அதாவது அவகாசத்தை அடைத்துக் கொண்டிருக்கிறதென்று கண்டுகொள்கிறோம். ஆகாசத்தைமட்டிலும் கவனித்தால் அது ஒரு அளவிற்கும் உட்படுகிறதில்லை. ஒரு பொருளை உபாதியாக எடுத்துக்கொண்டால் தான் அவ்வுபாதிக்கு உள்ளடங்கிய ஆகாசம் நமது அளவுக் கணக்கிற்கு வருவதாயிருக்கிறது. அது போல காலத்தையும் ஆரம்பமும் முடிவுமுள்ள ஒரு கிரியை அல்லது தொழில் என்னும் உபாதிக்கு உட்படுத்தி அளவிடுவதுதான் நமக்கு ஸாத்தியமாகும்.

நீளம் முதலியவற்றை அளப்பதற்கு அடி என்னும் ஓர் அளவு நமக்கு ஏற்பட்டிருப்பது போல ஸங்கீதவித்துவான்களுடைய பரிபாஷையில் ஒரு காநக்கிரியைக்கு உட்பட்ட காலத்தை அளவிடுவதற்கு அக்ஷரகாலம் என்ற ஓர் அளவு ஏற்பட்டிருக்கிறது. ஒரு அடி பன்னிரண்டு அங்குலங்களாகப் பிரிக்கப்பட்டிருப்பதுபோல ஒரு அக்ஷர காலமும் நான்கு மாத்திரைகளாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது.

இப்போதிருப்பதுபோல் கெடிகாரம் சுலபமாய்க் கிடைக்காதிருந்த காலத்தில் வெயிலில் ஒருவன் தன் நிழலைத்தானே தன் காலடிகளால் அளவிட்டு நாழிகை பார்ப்பது வழக்கமாயிருந்தது. அதுபோல ஒரு அக்ஷர காலம் இவ்வளவு உள்ளதென்று அவரவர்களது சாரீரத்தின் ஸ்வபாவத்தைக்கொண்டே அறியவேண்டும். சுகத்திற்குக் கேடில்லாமல் எவ்வளவு துரிதமாய்த் தங்கள் சாரீரத்தில் அகாராதிகளை ஸங்கீத வித்துவான்கள் ஸாதனை செய்து வைத்திருக்கிறார்களோ அதனை முன்னிட்டு அவரவர்களைப் பற்றியமட்டில் மாத்திராகாலம் நிர்ணயிக்கப்படும். அவ்விதமான அகாராதிகள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு மாத்திரையைக் குறிக்கும். ஆகவே ஒரு அக்ஷர காலமென்பது அவ்விதமான நான்கு மாத்திரைகள் அடங்கியதென்று நிச்சயிக்கலாம்.

வெண்பா முதலியவற்றின் நடையைக் கவனித்தறியப் பொதுவாய்த் தேமா புளிமா கருவிளம் கூவிளம் முதலிய வாய்பாடுகளைத் தமிழ்ப்புலவர்கள் கைக்கொண்டிருக்கிறார்கள். சந்தஸ் சாஸ்திரஜ்ஞர்களும் ஸம அர்த்தஸம விஷம விருத்தங்களின் நடைகளைக் கவனித்தற்கு எட்டு கணங்களையும் லகு குருக்களையும் குறிப்பிடுகின்ற 'Yamâtarâjabhânasalagam' என்னும் ஒரு வாய்பாட்டைச் சுருக்கமாய்த் தயார் செய்து வைத்திருக்கிறார்கள். அவ்விதமே நமது கானக்கிரியையில் அமைந்து கிடக்கின்ற நடைகளுக்கும் வாய்பாடுகள் உண்டு.

அந்த நடைகள் ஐந்து வகைப்படும். அவற்றுள்—(i)மூன்று அக்ஷர காலமுள்ளது ஒன்று; அதைத் திரியச்ர ஜாதி நடையென்பார்கள். (ii) நான்கக்ஷர காலமுள்ளது ஒன்று; அதற்குச் சதுரச்ர ஜாதி நடை என்று பெயர். (iii) ஐந்தக்ஷர காலமுள்ளது ஒன்று; அதைக் கண்ட ஜாதி நடை என்று கூறுவார்கள். (iv) ஏழக்ஷர காலமுள்ளது ஒன்று; அது மிச்ர ஜாதி நடை என்று சொல்லப்படும். (v) ஒன்பதக்ஷர காலமுள்ளது ஒன்று; அதை ஸங்கீர்ண ஜாதி நடை என்று சொல்வது வழக்கம்.

இவற்றுள்—(1) சதுரச்ர ஜாதி நடை உத்தமோத்தமமானது; ஆதலால் அது கானக்கிரியையில் பல்கிப் பெருகி வழங்கிவருகின்றது. (2) திரியச்ர ஜாதி நடை முன்னதற்கு அடுத்தபடியிலிருத்தலால் அதை உத்தமமென்றுமட்டும் சொல்லலாம். இவ்விரண்டின் பெயர்களில் நான்கு மூன்று என்னும் எண்கள் வெளிப்படையாய்த் தோன்றுவதால் இவற்றின் பொருளைப்பற்றி ஸந்தேகமுண்டாக நியாயமில்லை. (3)மிச்ர ஜாதி என்னும் சொல் சதுரச்ர ஜாதியும் திரியச்ர ஜாதியும் மிச்ரப்பட்டு அதாவது திலதண்டுலங்களைப்போல் கலந்து வருவது என்ற பொருளில் வந்தது; இந்த ஜாதி நடை முன்னிரண்டிற்கும் பிற்பட்டுத்தான் உபயோகத்தில் வருவதினாலும் சத்தியின்மையினாலும் மத்தியமான ஜாதியேயாகும். (4) கண்ட ஜாதி நடை முற்கூறிய ஜாதிகளுடன் கூடுவதற்கு யோக்கியதை இல்லாமல் கண்டமாய் அதாவது துண்டாய் நிற்பதால் அப்பெயர் கொண்டதாயிற்று. சதுரச்ர ஜாதியிலிருந்து ஒரு அக்ஷரத்தையும் திரியச்ர ஜாதியிலிருந்து ஒரு அக்ஷரத்தையும் கண்டித்துவிட்டு மூன்றுமிரண்டுமாய்க் கூடிவருவதால் அதற்கு அப்பெயர் வாய்ந்தது என்பாருமுண்டு. எவ்விதத்திலும் அந்த ஜாதி அதமமேயாகும். (5) ஸங்கீர்ண ஜாதி நடை உத்தமோத்தமமான சதுரச்ர ஜாதியும் அதமமான கண்ட ஜாதியும் ஸங்கீர்ணமாகி அதாவது பாலும் நீரும்போல் கலப்புற்று வருவதால் அப்பெயர் அதற்குக் கிடைத்தது. ஆகவே அது அதமாதமமாகும். அக்காரணங் கொண்டே கானக்கிரியையில் அது அநேகமாய் உபயோகத்திற்கு வருகிறதில்லை. ஸங்கீத வித்துவான்களையும் இவற்றுள் அவர்களுக்கு அதிகமாய்ப் பழக்கத்திற்கு வந்திருக்கிற ஜாதிகளை முன்னிட்டுத் தாரதம்மியப்படுத்தலாம். இந்த ஜாதிகளுக்கு இம்முறையில் (1) தரிகிட, (2) தகிட, (3) தஜணுதிமிகிட, (4) ததிமிகிட, (5) தகிணஜணுதிமிகிட என்பவைகள் வாய்பாடுகளாகும்.

இது வரையில் நமக்குக் கிடைத்த ஐந்து ஜாதிகளைக்கொண்டு நாம் ஜாதீய தாளங்களை அறிந்துகொள்ளக்கூடும். ஒவ்வொரு தாளத்திலும் மேற்கூறிய ஜாதிகளுள் ஒன்று ஒரு தரமாகிலும் பலதரமாகிலும் வாராமலிராது. அங்கு வரும்போது அதற்கு லகு என்று பெயர். பல தாளங்களில் திருதம் என்ற பெயருடன் தக என்னும் இரண்டக்ஷரகால வாய்பாடு சேர்ந்து வருவதுண்டு. சிலவிடத்தில் த என்ற ஒரு அக்ஷரகால வாய்பாடும் அவற்றுடன் கூடி வருகின்றது. இதைத்தான் அநுதிருதம் என்கிறார்கள்.

நமது ஸங்கீத வித்துவான்கள் ஜாதீய தாளங்களை ஏழு வகைகளாகப் பிரித்திருக்கிறார்கள். அவற்றின் கிரமத்தைக் குறிக்க ஒரு சுலோகம் சொல்வதுண்டு. அது வருமாறு:—

'Dhruvo mạthyo rûpakaṣ cha
jhampas triputa eva cha.
Aṭatâlaṣ chaikatâla
ityete sapta tâlakaḥ.'

இதன் பொருள் 'துருவம், மட்டியம், ரூபகம், ஜம்பை, திரிபுடை, அடதாளம், ஏகதாளம் என எழுதாளங்கள் உண்டு' என்பதாம்.

அவற்றுள் ஒவ்வொரு தாளத்திற்குமுள்ள ஐந்து ஜாதி பேதங்களும் அவற்றிற்கு ஆங்காங்கு வருகிற லகு திருத அநுதிருதக் குறிப்புக்களும் அவற்றிற்குரிய வாய்பாடுகளும் உதாரணங்களும் வருமாறு:—

## I. துருவதாளம்.

| 1. சதுரச்ரஜாதி. 4244. | | | | 2. திரியச்ரஜாதி. 3233. | | | |
|---|---|---|---|---|---|---|---|
| தரிகிட | தக | தரிகிட | தரிகிட. | தகிட | தக | தகிட | தகிட. |
| ஸரிகம | கரி | ஸரிகரி | ஸரிகம | ஸரிக | ஸரி | ஸரிரி | கமம |
| Etc., | | | Etc., | Etc., | | | Etc., |

ஷை காட்டியபடியே (7 × 5 = 35) தாளங்களுக்கும் சரளிவரிசை வருகிறது. இவைகள் பெரும்பாலும் சங்கீதப் புததகங்களிலிருப்பதினால் இங்கேவிடப்பட்டது.

இவற்றுள் சதுரச்ர ஜாதி திரிபுடதாளத்தைத்தான் ஆதிதாளமென்று சொல்வது வழக்கம். அதுவே ஆதியில் உபயோகப்பட்டிருக்கலாம். பிறகுதான் மற்ற தாளங்கள் வெளிப்பட்டிருக்கலாம். அதனால் அப்பெயர் வழங்கிவருகிறது. தாளங்களுள் லகுவாதி தாளமே உயர்ந்ததென்ற விவஹாரத்தில் அப்பெயரின் முதற் பாகம் குறைந்து ஸத்தியபாமாவை பாமாவென்பதுபோல் ஆதிதாளமென்று வந்ததென்றாலுமமையும்.

பாடும்போதும் தாளம்போடும்போதும் மிருதங்கம் முதலிய வாத்தியங்களை வாசிக்கும் போதும் ஜதிகளை வாயால் கொனிப்பிக்கும்போதும் சிலர் தலைவிரிகோலமாய்த் தத்தளிப்பதை நாம் அடிக்கடி பார்த்துப் பரிதபிக்கும்படி நேரிடுகிறது. உத்தமமான ஜாதி நடைகளில் அஸாதாரணமாய் அவர்கள் பழகுவார்களானால் இவ்வளவு கஷ்டத்திற்கு உள்ளாகமாட்டார்கள். விஷமமான நடையிலும் ஸமதிருஷ்டி உண்டானால் இச்சங்கடமில்லாமல் எல்லா ஜாதிகளும் வசப்பட்டு வரும். இப்படிச் சங்கடப்படுகிறவர்களுக்கோ ஸமத்திலும் விஷம திருஷ்டியே உண்டாகின்றது. பாவம்; என்ன செய்யலாம். மேலும் விஷமமான நடைகளை ஒரோரிடத்தில் மட்டிலும் காண்பித்து வந்தால் அழகாயிருக்கும்.

காநக்கிரியையில் தாளங்களை எடுப்பதற்கு ஸமம் அதீதம் அநாகதம் என்ற பேதங்கள் உண்டு. அவற்றின் விஷயங்களை மற்றொரு ஸமயத்தில் பேசலாமென்று நினைக்கிறேன்.

தற்காலத்து ஸங்கீத வித்துவான்களது நடவடிக்கையிலிருக்கிற சிற்சில தாளங்களின் ஸ்வபாவத்தை எளிதில் எவரும் அறிந்துகொள்ளவேண்டுமென்ற ஓர் நோக்கமே இவ்வியாஸத்தைப்படிக்கும்படி என்னைத் தூண்டிவிட்டது. இச்சபையில் இதுவே தாளங்களைப் பற்றிய ஆரம்போபந்நியாஸமாதலால் தாளங்களின் உண்மைகள் ஒன்று விடாமல் வெளிப்படும் வரையில் நமது ஊக்கம் உயர்ந்தோங்கும்படி பரமேசுவரன் அருள் புரிவாராக.

## சுருதி விஷயம்.

தஞ்சாவூர் பிர்ம்மஸ்ரீ பிடில் பஞ்சாபகேச பாகவதர் அவர்களால் படிக்கப் பட்டது.

மஹாவித்வான்களால் நிறைந்துள்ள இச்சபையோர்க்கு, வணக்கத்துடன், எனது சிற்றறிவுக் கெட்டியமட்டில் த்வாவிம்சதி சுருதியைப்பற்றி அறிவிக்க முயலுவதில், குற்றங்களை நீக்கி குணங்களிருந்தால் ஆதரிப்பீர்கள் என்றே நம்புகிறேன்.

இப்போது சொல்லப்போகும் சுருதி விஷயமாகவே, முன் நடந்திருக்கிற மூன்று தடவை கூடிய ஸமாஜத்திலும் பலவிஷயங்களிலும் சிறந்த வித்வான்களாலும் என்னாலும் சொல்லப்பட்டிருந்தபோதிலும், மறுபடியும் நான் இவ்விஷயமாய் சொல்ல நேர்ந்ததானது, புனருக்தி தோஷம் அதாவது கூறியது கூறல் என்கிற குற்றத்திற்குக் காரணமாயிருந்தாலும் ஏற்கனவே சொல்லப்பட்டிருக்கிற இந்த சுருதி ஸம்பந்தமான விஷயங்கள் எவ்விதமாய் முடிந்திருக்கின்றனவென்று ஆலோசிக்கிற இடத்தில், உண்மை விளங்கினதென்றாவது அல்லது உண்மை விளங்கவில்லையென்றாவது குற்றமுள்ளதென்றாவது, குற்றமும் குணமும் தெரிந்துகொள்ளக்கூடியதாக விபரமாய்ச் சொல்லப்படவில்லை யென்றாவது உள்ள எவ்வித மான அபிப்ராயத்திற்கு ஸபையோர்கள் முன் நிற்கிறார்கள் என்பதைத் தெரிந்துகொள்ள என்னாலியலாமல், கூறியது கூறல் என்ற குற்றத்தையும் எதிர்பாராது, சொல்லத் துணிந்த விஷயத்தில் ஸபையோர்கள் என்னை மன்னிக்கும்படி கேட்டுக்கொள்ளுகிறேன்.

எந்ததேச ஸங்கீதத்திலும் 12 ஸ்வரஸ்தானங்கள் ஒவ்வொரு ஸ்தாயியிலும் உள்ளதென்பது எல்லோரு மறிந்த விஷயந்தான்; அந்தப்படியே நமது கர்நாடக ஸங்கீதத்திலும் 12 ஸ்தானங்களையும் ஸப்தஸ்வரங்களால் உச்சரித்து சஞ்சரிக்கிறோம் என்பதும் ஸகலரும் அறிந்த விஷயமே.

நமது ஸங்கீதத்திலும், 12 ஸ்தானங்கள்தான் உளதா? இதற்கு மேல்பட்ட ஸ்தானங்களுமிருக்கிறதா? என்பதை ஆராய்ச்சி செய்யும்போது, நமது ஸங்கீத நூலாசிரியர்கள் "த்வாவிம்சதி சுருதி" ஸ்தானங்கள் ஒவ்வொரு ஸ்தாயியிலுமுள்ளதென்பதைத் தெரிவித்திருக்கிறார்கள். அந்த 22 ஸ்தானங்களையும் மேற் சொல்லிய 12 ஸ்தானங்களைப்போல் தனித்தனியே தெரிந்துகொள்ளப் பலரால் கூடாமலிருந்தாலும், அநேக ராக வித்யாஸங்களில் விநியோகமாவதிலிருந்து 22 ஸ்தானங்கள் வெளிப்படுவதை ஒருவாறு அறிந்துகொள்ளலாம்; இதையே முன்னோர்கள் கண்டு பிடித்து ஸ, ரி, க, ம, ப, த, நி என்ற ஸப்தஸ்வரங்களுக்கும் முறையே 4, 3, 2, 4, 4, 3, 2 என்ற சுருதிகளிருப்பதாக வசன ரூபங்களால் வெளியிட்டிருக்கிறார்கள்; இதைக்கொண்டு கானங்களிலும் வாத்யாதிகளிலும் நம்மால் கேட்கப்படுவது, 22 ஸ்தானங்களி லிருந்துண்டாகும் நாதபேதமே, இதை விபரமாய் அறிந்து கொள்ள, முக்கிய கருவியான வீணையை ஆதாரமாக வைத்துக்கொண்டு நிதானிப்போம்.

வீணையை சுருதி சேர்த்து மீட்டுவதால் உண்டாகிற நாதம் ஷட்ஜ ஸ்தானம். மேருவினிடமுள்ளதால் முதல் ஸ்தானமாக வைத்துக்கொள்வோம். இதற்கடுத்த மெட்டின் ஸ்தானத்தில் விரல் வைப்பதால் உண்டாகிற, நாதம் "கோமள ரிஷபம்" இதற்கடுத்த இரண்டாவது மெட்டின் ஸ்தானம் "தீவ்ர ரிஷபம்." மூன்றாவது "கோமள காந்தாரம்." நாலாவது "தீவ்ர காந்தாரம்." ஐந்தாவது "கோமள மத்யமம்." ஆறாவது "தீவ்ர மத்யமம்." ஏழாவது "பஞ்சமம்," எட்டாவது "கோமள தைவதம்." ஒன்பதாவது "தீவ்ர தைவதம்."

பத்தாவது "கோமள நிஷாதம்." பதினொன்றாவது "தீவ்ர நிஷாதம்." பனிரெண்டாவது மேருவின் ஸ்தானமே. இப்படி வகுக்கப்பட்டிருப்பதில், ஷட்ஜம் பஞ்சமம் இந்த இரண்டு ஸ்தானங்கள் தவிர பாக்கியான ரி, க, ம, த, நி என்ற ஐந்து ஸ்வரங்களும், கோமளமும் தீவ்ரமுமுள்ளதாய் 10 ஸ்தானங்களில் ஒலித்து ஸ, ப இரண்டு ஸ்வரங்கள் சேர 12 ஆகிறது. இதில் த்ருவம், சலம், (அதாவது, நிலையுள்ளது, நிலைபெயருவது) என்கிற ஸ்தானங்கள் ஒவ்வொரு ஸ்தாயியிலும் உள்ளது. எப்படியெனில் ஸ, ப என்ற இரண்டு ஸ்வரங்களும் நிலையாயுள்ளதும், இடம் பெயர்ந்து உச்சரிக்கப்படாததுமாயுள்ளது; மற்ற ஸ்வரங்களான ரி, க, ம, த, நி, என்ற கோமளமும் தீவ்ரமுமாயுள்ள பத்து ஸ்தானங்களிலிருந்தும் சிலசில ராகங்களில் ஏற்றத்தாழ்வடைந்து பஞ்சம, மத்யம ஸ்வரங்களின் அளவிலடங்கிய எல்லையின் முடிவில் உள்ளதான மற்றும் பத்து ஸ்தானங்களில், ரி, க, ம, த, நி என்கிற 5 ஸ்வரங்களும் உச்சரிக்கப்படுவதை யறிந்து அதற்கு ஸ, ரி, க, ம, ப, த, நி என்ற ஏழு ஸ்வரத்திற்கும் முன் சொல்லிய 4. 3, 2, 4, 4, 3, 2, என்ற முறையாக உள்ள 22 சுருதிகளுக்கும் (1) தீவ்ரா, (2) குமுத்வதி, (3) மந்தா, (4) சந்தோவதி, (5) தயாவதி, (6) ரஞ்சனி, (7) ரக்திகா, (8) ரௌத்ரி, (9) க்ரோதா, (10) வஜ்ரிகா, (11) ப்ரஸாரிணி, (12) ப்ரீதி, (13) மார்ஜநி, (14) க்ஷிதி, (15) ப்ர, (16) ஸந்தீபநி, (17) ஆலாபினி, (18) மதந்தி, (19) ரோகிணி, (20) ரம்யா, (21) உக்ரா, (22) க்ஷோபிணி என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். இந்த ஸ்தானங்களில் ரீ, க, ம, த, நி என்ற 5 ஸ்வரங்களைக்கொண்டு ஒவ்வொரு ஸ்வரங்களுக்கும் 4 இடத்தை ஏற்படுத்தி உச்சரிக்கப்பட்டு அனுபோகத்தில் உள்ளதாயிருந்தால், 22 சுருதிகள்தான் என்று விளங்குகிறது. ஒரு ஸ்தாயியில் எவ்வளவு சுருதி ஸ்தானங்கள் இருக்கலாம் என்பதைக் கணக்கிடுவோ மென்றால் பரமாணு ஒவ்வொன்றுக்கும், நாத வித்யாஸம் ஏற்படுவதைக்கொண்டு, அதன் முடிவைக்கண்டு பிடிக்க இயலாது. ஆனால் த்ருவமாயுள்ள ஸ, ப, என்ற இரண்டு ஸ்வரங்களின் இடைவெளியை ஆதாரமாய் வைத்துக் கொண்டு இதனுடைய அளவுப்படி கணக்கிடும்போது, ஸ, விலிருந்து, ப, என்ற ஸ்வரத்தை தழுவி, அந்த, பா.வை, ஸா, வாக வைத்து, அதற்கு பஞ்சம ஸ்வரமான மேல் ஸ்தாயி, தீவ்ர ரிஷபத்தைப்பிடித்து, இப்படியே வீணாதி வாத்யங்களிலும், சாரீரத்தினாலும், குறிப்பிடும்போது, (ஸ, ப, ரீ, த், க், நீ, ம், ரீ, த, க, நி, ம, ஸ,) என்று தீவ்ர ஸ்வர ஸ்தானம், 5, கோமள, ஸ்வர ஸ்தானம், ஆக 10 இடமும், ஸ, ப, வின் ஸ்தானங்கள் சேர 12 ஸ்தானங்களான இதற்குள்ளாகவே மயக்கத்தை அடையும்படி ஏமாற்றி விடுமேயல்லாது, வேறல்ல. எது ரஹஸ்யமாயுள்ளதோ, அதானது என்னால் செய்விக்கப்பட்டிருக்கும் (நாதமானி) என்ற கருவியினால்தான், செவ்வையாய் அறிந்துகொள்ளக்கூடியது. இக்கருவியை நான் செய்து பார்ப்பதற்கு முந்தி, நானும் இம்மயக்கத்தை அடைந்து, ஓர் ஸந்தேஹத்தை சுமந்துகொண்டிருந்தேன். அப்போக்கொத்த என்னை ப்ரஹ்மஶ்ரீ ஸுப்ரமணிய சாஸ்திரிகள் அவர்கள், இந்த ரஹஸ்யத்தை தெரிவித்து, என் ஸந்தேஹச் சுமையை இறக்கி வைத்ததற்கு யான் மிகவும் நன்றியுள்ளவனாயிருக்கிறேன். உண்மையாக நமது சாஸ்திரிகள் அவர்கள், தனது நுட்பமான அறிவை செலுத்தி, கணக்கிட்டதில் உண்டான, தேஹ ச்ரமத்தையும் பாராட்டாது நித்ராதிஸுகங்களையும் சோரவிட்டு நமது ஸமாஜத்தின் அபிவிர்த்திக்கு உழைக்கிறோம் என்ற உத்ஸாஹம் மேல் கொண்டவராய் இந்த சுருதி ஸ்தானங்களின் கணக்கு ரஹஸ்யத்தை தானறிந்ததுடன் எனக்கும் தெரிவித்தபோது நான் அடைந்த ஸந்தோஷத்தையே, ஸங்கீதம் கற்ற ஒவ்வொரு பண்டிதர்களும் அடையப்ரார்த்தித்துக்கொண்டிருக்கிறேன். மேலும், உண்மையாய் உழைத்து ஸமாஜாபிமானியுமான சாஸ்திரிகள் அவர்களுக்கு, இச்சபையோரால் ஓர் கௌரவபட்டம் கொடுக்கவேண்டிய விஷயத்தில், யான் முழுமனதுடன் சிபார்சு செய்வதுடன், இப்படி

ஸமாஜாபிமானிகளான வித்வான்களுக்கும் ஓர் கௌரவம் கொடுத்து ஆதரிக்கக்கேட்டுக்கொள்ளுகிறேன். நிற்க, இப்போது 22 ஸ்தானங்களின் விவரத்தை தெரிவிக்கிறேன். அதாவது, (ஸ) என்ற ஷட்ஜ ஸ்தானத்தில் இருக்கும் தேவதத்தன் என்ற ஒருவர் பஞ்சம ஸ்தானத்தின் அளவுள்ள இடங்களில் அடிவைத்து ஆரோஹணமானார். அப்படியே, மேல் ஷட்ஜத்திலிருந்து, முன்னளவுபடிக்குள்ள மத்யம ஸ்தானத்தில் அடிவைத்து அவரோஹணமாக தாளவதத்தன் என்ற ஒருவர் இறங்கி வர அவ்விருவரும் 53 ஸ்தானங்களைக் கொடுத்து 54வதும் முதலாவதுமாயுள்ள ஷட்ஜ ஸ்வரத்தில் தங்கினார்கள். இதனால் 3 ஸ்தாயிக்குள்ளாக கிடைத்த ஒவ்வொரு ஸ்வர ஸ்தானங்களையும் முதல் ஸ்தாயியில் குறிப்பிட்டுக்கொள்ளும்போது, 53 ஸூக்ஷ்ம சுருதிகள் விளங்குகிறது. இதையே நம் முன்னோர்கள் ஸ, ப, ஸ, ம ஸம்மந்த மென்று, குறிப்பிட்டிருக்கிறார்கள். இவ்வளவையும் உபயோகப்படுத்துவது முடியாத தென்று இதிலிருந்து 22 ஸ்தானங்களைப் பொறுக்கினார்கள். எந்த கணக்கின்படி எடுத்திருக்கிறார்கள் என்று நிதானிக்கும்போது 1, 13, 25, 37, 49 என்ற வழியாய் இனி வருகிற லக்கம் 61 என்பதை அறிந்து, 49ல், ஒரு ஸ்தானத்தை வைத்துக்கொண்டு, 61ல் 53யும் கழித்து, மிச்சமான 8 பிடித்து 20, 32, 44 என்று அங்கொரு ஸ்தானத்தை அமைத்து இப்படி உபயோகத்துக்கு அனுகூலமாயுள்ள 22 ஸ்தானங்களைமட்டும் குறிப்பிட்டு, அதற்கு மேல் சொல்லிய (22) நாமகரணமும் செய்து தீர்மானித்திருக்கிறார்கள். இதை எல்லோரும் ஸ்வரூபப்படுத்திக்கொள்ள ஓர் புஷ்பம்போல் தயார்செய்து சித்திரிக்கப்பட்டிருக்கும் ஓர் ப்ளான் இதோ இருக்கிறது. தயவுடன் பார்க்கவேணும். இதனுடைய கணக்கு விவரங்கள் மற்றொரு ப்ளானில் எழுதப்பட்டிருக்கிறது. அதுவும் இதுதான். இந்த 53க்கும் பெயர் கொடுத்திருக்கிறது. கடப்யாதி ஸங்கியாப்ரகாரம், ஸ்வரத்தின் பெயரையும், ஸ்தாயியின் கணக்கையும், தெரிந்துகொள்ளக் கூடியதான பெயர். அதை அந்த ப்ளான் போட்டிருக்கிற கடிதத்தில் ஒட்டியிருக்கிறது. ஆகவே ஸ்தூலமான 12 ஸ்தானங்களில் ஸூக்ஷ்மமாய் அடங்கியுள்ள பல சுருதிகளில் ரி, க, ம, த, நி, என்ற ஐந்து ஸ்வரங்களும், மற்றும் 10 இடங்களில் ஸஞ்சரிப்பதைகொண்டு 22 ஸ்தானங்கள் ஏற்படுகிறது. தவிர இந்த 53 ஸ்தானங்களையும் ப்ரதிதினம் கவனித்து வரும் ஸ்வரக் ஞானிகளுக்கு விசேஷமான தீவ்ர ஞானமும் அறிவின் ஸூக்ஷமமும் வ்ருத்தியாகும் என்பதில் தடையில்லை. எழுதியிருக்கும் வ்யாஸத்தில் பல பிழைகள் இருந்தபோதிலும், மன்னித்து, விஷயங்களைமட்டும் ஆதரிக்கக்கோருகிறேன்.

---

# சங்கீத அப்பியாச முறை.

திருநெல்வேலி ஜில்லா அரிகேசவநல்லூர் பிரம்மஸ்ரீ L. முத்தையா பாகவதர் அவர்களால் படிக்கப்பட்டது :—

ஸங்கீத சாகித்ய வித்வன் மணிகளான கனவான்களே, யான் இச்சங்கீத வித்யா மகாஜன சங்கத்து முதல் மீட்டிங்கில் ஸங்கீத அப்பியாச முறையென்ற விஷயத்தைப்பற்றிச் சில பாகங்களை இச்சபையின்கண் என் சிற்றறிவிற்கெட்டியவாறு எழுதி வாசித்ததை பெருமைதங்கிய தாங்கள் மறந்திருக்கமாட்டீர்கள். கடந்த இரண்டு மீட்டிங்குகளுக்கு நான் வந்து தங்களுடைய தரிசனத்தையும் சங்கீதக் கடல்கடைந்தவமுதமென்ன நும்வாக்கிலிருந்து பொழியும் சங்கீத விஷயாம்ருதத்தையும் கண் காதுகளாற் பருகி அகமகிழ்வுற பெற்றிலேனெனினும் தற்காலம் இங்கு கூடியிருக்கும் நாதசூர ராகாதி நிர்ணயங்களே உருவெடுத்து வந்ததெனத் தோற்றும் நுமது தரிசனத்தால் மிகமகிழ்வுற்று நான் முதல் மீட்டிங்கில் சொல்லிய சங்கீத அப்யாசமுறைகளைச் சில இங்ஙனம் நுவல்கின்றேன். முன் மீட்டிங்கில் சுவர நிர்ணயங்களைப்பற்றித் தெரியப்படுத்தியிருக்கிறேன். சங்கீத அப்யாசிகள் எப்படி சுருதிக்ஞானம் ராகக்ஞானம் இதுகளைப் பெறுகிறார்களோ அதுபோலவே சங்கீதத்தை அப்யசிக்கத் தொடங்கும் காலத்திலேயே சங்கீதத்துக்கு இன்றியமையாததான தாளங்களின் விபரங்களையும் தெரிந்து சாதிக்கவேண்டும். சுவரக்ஞானத்துக்கு எவ்விதமாய் சுவரங்களை ஒவ்வொரு ஸ்தானங்களாகத் தெரிந்து சாதிப்போமோ அப்படி தாளங்களை சுரங்களோடு சேர்த்து அப்பியாசம் செய்யவேண்டும்.

தாளங்களுக்குள் மிகவும் சுலபமாயிருக்கிற ஆதிதாளத்தையே நம்முன்னோர் சுராவளியைப்பாடுகிற காலத்தில் அப்யசிக்கும்படி ஏற்படுத்தியிருப்பதையும் ஜண்டை வரிசைகள் முதலானதுகளிலே தாளக்ஞானம் விருத்தியாகும்படியான பல மார்க்கங்களைக் காட்டியிருப்பதையும் சங்கீதத்தை முறையாயப்யசித்த சகலரும் அறிவார்கள் எனினும் பெரியோர்கள் ஆதிதாளத்தை முதலிலெடுத்துக்கொண்ட விபரத்தையும் அதனால் அடையும்படியான பிரயோஜனத்தையும்பற்றி சற்று விசாரணை செய்வோம். நமது சங்கீதத்துக்கேற்பட்ட ஸப்த சுரங்களைமட்டும் சொல்வதற்கு ஏழு அக்ஷரங்கள்டங்கிய ஒரு தாளத்தை வைத்துக்கொண்டால் போதுமே. அப்படிக்கின்றி 8-வது சுரமாகிய மேல்ஸ்தாயிக்காதாரமான ஷட்ஜத்தையும் கூட ஏன் வைத்துக்கொண்டார்கள் என்று யோஜிக்குமிடத்து அப்யாசிகட்குத் தாளத்திலும் சரியானக்ஞானம் உண்டாகவேண்டுமென்றே எண்ணி எட்டு அக்ஷரகாலமுள்ள சதுரச்ரமான ஆதிதாளத்தைக் கற்பித்தார்கள். ஏழு அக்ஷரங்களான தாளங்களை முதல் முதல் எடுத்துக்கொண்டால் மத்தியம காலப்படுத்தி முன்னோர்களாலே குறிப்பிட்ட ஷட்காலங்களையும் பாட அப்யாசிகட்கு மிகுந்த வருத்தத்தைக் கொடுக்குமென்றும் எட்டு அக்ஷரகாலமுள்ள ஆதிதாளமானது அப்யாசிகளுக்கு நினைத்தபடி ஆறுகாலப்படுத்திப் பாடவும் ஆதிதாளத்திலிருந்தே சகல தாளங்களுடைய முறைகளையும் தெரிந்துகொள்ளவும் சுலபமாதுமென்று நான் ஆதிதாளத்தை முதல் அப்யாசமாக வைத்தார்கள் என்று தோன்றுகிறது. பொதுவாக தாளங்களுக்குள் பல அங்கங்களும் பலஜாதிகளும் பலவித முறைகளும் ஏற்பட்டிருந்தாலும் தாளங்களுக்குச் சாதிவின்யாசமே முக்கியமாக இப்பொழுது வழங்கிவருகிறது. எட்டு அக்ஷரகாலமுள்ள சுராவளியோடு எட்டு அக்ஷரப்ரமாணமுள்ள ஆதிதாளத்தை சேர்த்துத் தாளவின்யாசங்களை தெரிந்துகொள்வதற்கு அனுகுணமான விருத்த ப்ரஸ்தாரக்கிரமமாக வரிசைகளைச் சேர்த்து அப்யாசித்துவரவேண்டும். அனந்தங்களான பேதங்கள் ஏற்பட்டிருக்கிறது.

அதுகளை இவ்விடத்தில் பிரஸ்தரித்துக் காட்டுவது விரியுமாதலின் ஒரு தொகுதியின் சில பாகத்தைமட்டும் திருஷ்டாந்தமாகக் காட்டுகிறேன்.

அதாவது

எட்டு அக்ஷரமுள்ள ஸ ஸ, ரி ரி, க க, ம ம. என்பதை

ஸ ஸ ரி ரி க க ம ம
ஸ ஸ ரி ரி க க ம ா
ஸ ஸ ரி ரி க க ா ம
ஸ ஸ ரி ரி க ா க ம
ஸ ஸ ரி ரீ - க க ம
ஸ ஸ ரீ - க க ம ம
ஸ ஸா - ரி க க ம ம
ஸா - ரி ரி க க ம ம

இவ்விதங்களாகக் குரில் நெடில்களோடு ஸ்வர வரிசைக்கிரமங்களாக அப்யாசிகள் தாளத்தோடு சொல்லிப்பழகுவதினால் அதிசுலபமாக ஸ்வரம் பாடுகிற அழகையும் தாளத்தினுடைய நிச்சயஞானத்தையும் பெறுவார்கள்.

இந்த எட்டு ஸ்வரங்களையும் இரட்டித்து பதினாறு அக்ஷர மத்தியம காலமாகச்செய்து ப்ரஸ்தார ஒழுங்குடன் கிரமமாக பழகிவருகிற விஷயத்தில் தாளங்களுக்கு முக்யமாயிருக்கிற ஜாதிபேத விபரங்களும் இவ்வப்பியாசிகளுக்குச் சுலபமாகும். நாலு அக்ஷரகாலங்கள் முதல் பதினாறு அக்ஷரகாலங்கள் வரையிலுள்ள அப்யாச விபரங்களை ஸ்வர வரிசைகளுடன் அடுத்த மீட்டிங்கில் எனக்குத் தெரிந்தவரையில் யெழுதிக்கொண்டு வருகிறேன். இதிலிருக்கும் பிழைகளை மன்னித்தருள்வீராக.

# தமிழ்நாட்டுப்பண்.

பிரம்மஸ்ரீ சேத்துருமபாரதியார் அவர்களால் பாடிக்கப்பட்டது.

கல்வி, அறிவு ஒழுக்கங்களிலும் சங்கீதசாகித்தியங்களிலும் சிறந்து விளங்கும் இம்மகா சபையோர்முன் நமது தமிழ்நாட்டின்கண் பூர்வகாலந் தொட்டு வழங்கிவரும் பண்ணடைவு (இராகமுறைமை) என்னும் விஷயத்தைப்பற்றி ஒருவாறு கூறவேண்டுமென்ற ஆசைபற்றி இச்சபைக்கண் வந்த யான், முதலில் ஆன்றோர்களைக் கேட்டுக்கொள்வது ஒன்றுண்டு. என்னெனில் கூறும் விஷயங்கள் பல பிழையுடையவேனும் அவற்றிலுள்ள குற்றங்களை நீக்கிக் குணமுடையவற்றை நன்கு ஆராய்ந்து உள்ளங்கை நெல்லிக்கனிபோல யாவர்க்கும் இனிது விளக்குவீர் என்பதே. பாலிலுள்ள நீரைப்பிரித்தல் அன்னத்தின் இயற்கையல்லவா?

நீர்வளம் நிலவளம் பொலிந்துள்ள நமது தமிழ்நாடு தொன்றுதொட்டு முடியுடைமன்னர் மூவராலும் அரசாளப்பெற்று வந்ததென்பது நாம் அறிந்த விஷயமே. மூவராவார் சேரசோழ பாண்டியரென்பார். அவர்காலந்தொட்டே நம்நாட்டிலுள்ள ஆண்பாலார் பெண்பாலார் பலரும் அந்நியநாட்டார் வியக்கும்படி சங்கீதத்தில் தேர்ச்சி பெற்றிருந்தனரென்பது விசதமாகும்.

இனி நம் தமிழ்நாட்டிலுள்ள பண்டிதராகிய முன்னோர்கள் சங்கீதத்தைத் தமிழ்ப் பெயரால் வழங்கிவந்தனர் எவ்வாறெனின், சங்கீதத்தை இசைத்தமிழாகக் கொண்டு தமிழ்ப்பாஷையை இயற்றமிழ் இசைத்தமிழ், நாடகத்தமிழ் என மூவகைப்படுத்தி இம்மூன்றையுமே முத்தமிழென்றும், இம்மூன்றுமே ஈசுவர சொரூபமென்றும், கருதி வந்திருக்கின்றனர். திருநாவுக்கரசு சுவாமிகளும்

"முத்தமிழு நான்மறையுமானான் கண்டாய்" என்று கூறியிருக்கின்றனர். மேலும் அவற்றுள் எழுத்தும் சொல்லுமடங்கிய இயற்றமிழ், இசைத் தமிழுக்கு அங்கமாகயிருத்தலின் இசைத்தமிழின் பெருமையும் அதனை யாதரித்துவந்த தமிழ்நாட்டிலுள்ள நம்மவர் பெருமையும் இனிது விளங்குகின்றன.

இனித் தமிழ்நூலில் கீதத்தை இசையென்றும் இராகத்தைப் பண் என்றும் பகரப்படும். முதலில் ஆளத்தி தோன்றி பின் இசையும் பண்ணுமாம். ஆளத்தி (ஆலாபனம் போலும்) மேலும் இசையோடு தமிழ்ப்பாடல்களை பண்ணமைத்துப் பாடுவதால் அறிவில்லாத பிராணிகளும் ஜடபதார்த்தங்களும் உருகுமானால், ஏனையோர்க்குக் கேட்பானேன்? சர்வவியாபியாயுள்ள கடவுள் இலக்கணக் குறைபாடின்றி இசையோடு பாடுகின்றவர்களது பாடல் கேட்டுருகி அவர்கள் பக்தி வலையிற்சிக்குண்டு நினைத்தவெல்லாம் அளிக்கின்றனர் என்றால் அவ்விசையின் பெருமையை யியம்பமுடியுமோ? ஆகவே, கடவுள், தம்மிடத்து பக்தியோடு உருகுவாரிடத்தும் பக்தியோடு இசைத்தமிழைப் பண்ணமைத்து கண்டத்தாலும், குழல் யாழ் என்னும் இசைக்கருவிகளாலும் பாடுவோரிடத்தும் மிகுதியுங்கருணை புரிகின்றனர்

பெரிய புராணத்தில் ஆனாயநாயனார் பக்திபூர்வமாய் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தைத் தமது புள்ளாங்குழலில் வைத்து சராசரம்யாவும் உருகும்படிக் கானம் செய்ய அதற்குக் கடவுள் உடனே அருள் செய்தனர். அவ்வாறே சமயாசாரியர் நால்வர்களுடைய இசைப்பாவாகிய தேவார திருவாசகங்களுக்கு உருகி அநேக அற்புதங்கள் காட்டியிருக்கின்றனர். திருவிளையாடற்புராணத்தில் பாணபத்திரரென்னும் யாழிசைப் புலவருக்குக் கடவுள் விறகாளாய்த்தோன்றித் தன்னைப் பாணபத்திரர் அடிமை யென்று சொல்லிக்கொண்டு, வாதுக்குவந்த ஏமநாதனென்னும் யாழிசைவல்லோனிடத்தில், சாதாரி யென்னும் பண்ணையாழில் வாசித்து அவன் அஞ்சி இரவில் ஒருவருடனும் சொல்லாமல் ஓடும்படி செய்தனர்.

நண்பர்களே! கடவுள் இவ்வாறு இசைக்கண் உருகி மகிழுவாராயின் இசையின் பெருமையைச் சொல்லவும் போதுமோ? ஆனாயநாயனார்புள்ளாங்குழலில் இசைபாடுகையில் கேட்ட சராசரம்யாவும் உருகினவென்பதற்கு அடியில்வரும் சில பாடல்களால் அறியலாம்.

ஆளத்தியாவது முதற்பாடுமிடத்து மகரவொற்றால் நாதமென்னும் சுருதியை எழுப்பி அதனைத் தொழில்செய்யுமிடத்து குற்றெழுத்தாலும் நெட்டெழுத்தாலும் செய்யப்படும். இதனை—

"மகரத்தினொற்றாற் சுருதி விரவும்
பகங்குறிநெடில் பகரித்து—நிகரிலாத்
தென்னா தெனாவென்று பாடுவரே லாளத்தி
மன்னுவிச் சொல்லின் வகை."

எனவும்,

"குன்றாக் குறிலைந்துங் கோடாநெடிலைந்து
நின்றார்ந்த மந்தாரந்தவ்வோடு—நன்றாக
நீளத்தாலேழுநிதானத்தானின்றியங்க
வாளத்தியாமென்றறி."

எனவுங் கூறும் ஆன்றோர் செய்யுட்களாலுமுணர்க. மவ்வும், நவ்வும், தவ்வுமல்லாத மற்றையமெய்யெழுத்துக்கள் ஆளத்திக்கு வருதலில்லை. மேற்கூறிய மூவகை மெய்யெழுத்துள் மவ்வினம் சுத்தத்திற்கும், நவ்வினம் சாளத்திற்கும் தவ்வினம் தமிழுக்குமுரியது. இவ்வாறன்றி கலந்தும் வரும்.

இவ்வகையான ஆளத்தி பலபட (காட்டு, நிறம், பண்) க்கிடத்தலின், இதனை விரிக்கிற் பெருகுமாதலின், இம்மட்டோடு நிறுத்தி இதன் வழித்தோன்றிய, இசை, பண் என்பவைகளைச் சிறிது ஆராய்வாம்.

இவ்வாறு மூலாதாரத்தினின்று வரும் எழுத்தின் நாதம் ஆளத்தியாய்ப் பிறகு இசையென்றும், பண்ணென்றும் பெயர்பெறும்; இசைபல இயற்பாக்களுடனே ஆளத்தியை இசைத்தலால் இசையென்றும், நெஞ்சம், மிடறு நாக்கு, மூக்கு, அண்ணைக்கு, பல், உதடு என்ற பெருந்தான எட்டினும் எடுத்தல், படுத்தல், நலிதல், கம்பிதம், குடிலம், ஒலி, உருட்டு, தாக்கு என்ற கிரியைகளெட்டாலும் பண்ணிப்படுத்தலால் "பண்" என்றும் பெயர்பெறும். இவ்வாறுதல்,—

"பாவோடணைதலிசை யென்றார்பண்ணென்றார்
மேவார் பெருந்தானமெட்டானும்—பாவாய்
எடுத்தல் முதலாவிருநான்கும் பண்ணிப்
படுத்தலாற் பண்ணென்றுபார்."

என்னும் ஆன்றோர் செய்யுட்களானும் அறியப்படுகிறது.

இனி ச, ரி, க, ம, ப, த, நி என்னுமேழெழுத்தினையும் மாத்திரைப்படுத்தித் தொழில் செய்ய இவற்றுள்ளே, குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழிசை பிறக்கும். இவ்வேழிசையை வடநூலார் முறையே சட்ஜம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்று கூறுவர். இவ்விதமாய் ஏழிசை பிறந்து இவற்றுள்ளே பண் பிறக்கும்.

"சரிகமபதனி யென்றேழெழுத்தாற்றானம்
வரிபரந்த கண்ணிணுய் வைத்துத்—தெரிவரிய
வேழிசையுந் தோன்றுமிவற்றுள்ளே பண்பிறக்கு
சூழ்முதலாஞ்சுத்தத்துளே.

என்று இசைநூல்வல்லார் கூறிய வற்றுனும் இனிது விளங்கும்.

இனி இவ்வேழிசைக்கும் வரும் மாத்திரைகளைப் பற்றிச் சிறிது ஆராய்வாம். இசைக் கருவிகள் பலவற்றுள்ளும் பெரியோர்களால் மிகச் சிறந்தனவென்று அங்கீகரிக்கப்பட்டவை குழலும், யாழுமே; குழல் புல்லாங்குழல்; யாழ் வீணை; இவையிரண்டும் சிறந்தன வென்பதைப் பற்றிச் சிலப்பதிகார நூலாசிரியராகிய இளங்கோவடிகள்

"யாழுங்குழலுஞ்சீருமிடறுந்
தாழ்குரற்றண்ணுமை"

என்றும், திருக்குறள் நூலாசிரியராகிய தெய்வப்புலமை திருவள்ளுவரும்

"குழலினிது யாழினிதென்ப"

என்றுங் கூறியிருத்தலால் இனிதுவிளங்கும். யாழ் நான்குவகைப்படும், குழல் ஐந்து வகைப்படும். இசைக்கருவியால் மாத்திரையறியவேண்டியிருத்தலின் யாழையும் குழலையும் எடுத்துக்கொண்டாம். இவற்றின் இலக்கலை இன்னொரு சமயத்தில் கூறப்படும். இவற்றின் இலக்கணங்களை விரிப்பிற் பெருகுமாதலின் இவற்றை நிறுத்தி, இசைக்கு மாத்திரையிலக் கணத்தை ஆராய்வாம். சிலப்பதிகார உரையாசிரியாகிய அடியார்க்கு நல்லார் கூறும் மாத் திரையிலக்கணத்தால் ஊகிக்குமிடத்து மாத்திரையென்பது சுருதியென்று கொள்ளவேண்டி யதாயிருக்கிறது. எப்படியெனில், குரல் என்னும் ஷட்ஜத்துக்கு மாத்திரை நான்கு என்றும் துத்தம் என்னும் ரிஷபத்துக்கு மாத்திரை நான்கு என்றும், கைக்கிளை என்னும் காந்தாரத் துக்கு மூன்று மாத்திரையென்றும், உழையென்னும் மத்திமத்துக்கு இரண்டு மாத்திரை யென்றும், இளியென்னும் பஞ்சமத்திற்கு நான்குமாத்திரையென்றும், விளரி என்னும் தெய் வதத்துக்கு மூன்றுமாத்திரையென்றும், தாரம் என்னும் நிஷாதத்துக்கு இரண்டு மாத்திரை யென்றுங் கூறி ஆக மாத்திரை இருபத்திரண்டு என்று கூறியிருக்கின்றமையினுலும்; இதனை—

"குரறுத்தநான்குகிளைமூன்றிரண்டாங்
குரையாவுழையிளிநான்கு—விரையா
விளரியெனின் மூன்றிரண்டு தாரமெனச்சொன்ஞர்
களரிசேர் கண்ணுற்றவர்"

என, இசைநூல்வல்ல பெரியோர் கூறியிருத்தலாலும், மாத்திரையென்பது, சுருதி யென்றும் அது இருபத்திரண்டு என்றும், ஊகிக்கவேண்டியதாயிருக்கிறது. இவற்றுள்

நி ம ம ச [illegible] ப ப

தாரத்தில் உழைபிறக்கும், உழையில் குரல்பிறக்கும்; குரலுள் இளி பிறக்கும்; இளியுள்

ரி ரி தெ தெ கா

துத்தம் பிறக்கும்; துத்தத்துள் விளரி பிறக்கும்; விளரியுள் கைக்கிளை பிறக்கும்; இதனுல் முதலில் தோன்றுவது தாரமெனத் தெரிகிறது.

இது இனி, அவ்விசைகளால் பிறக்கும் பண்களைப்பற்றி கூறுவாம்.

தமிழ் நூலில் நிலத்தை முல்லை குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என ஐந்துவகை யாகப் பிரித்தபடியே பண்களும், முல்லைப்பண், குறிஞ்சிப்பண், மருதப்பண், நெய்தற்பண், பாலைப்பண், என ஐந்து வகையாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இவற்றுள் முல்லைப்பண்ணைச் சாதாரியென்றும், நெய்தற்பண்ணை விளரியென்றும் பாலைப்பண்ணைக் காந்தாரபஞ்சமம் என்றுங்கூறுவர்.

இவ்வாறு ஐவகைநிலப்பெயரால் வரும் பண் நூற்றுமூன்று. அவை, பண், பண்ணியம், திறம், திறத்திறம்; என நாலுவகைப்படும். இவற்றை சம்பூரணம், சாடவம், ஔடவம், சதுர்த்தம் என வடமொழிப் பெயரான் வழங்குவர், சதுர்த்தம் என்பதன் பெயரும் கேட்பது இக்காலத்தில் அருமையாயிருக்கிறது, இது விஷயத்தில் சங்கீதப் புலவர் இனிது ஆராய் வாராக.

ஆனி தமிழில் இப்போது ஒருவாறு தெரியக்கூடிய பண்களின் பெயர் வகைகள் சில அவை, இந்தளம், சீகாமரம், காந்தாரம் பியந்தைக் காந்தார நட்டராகம் செவ்வழி காந்தாரி பஞ்சமம், கொல்லி, கௌசிகம், பஞ்சமம் சாதாரி, பழம் பஞ்சுரம் புறநீர்மை, அந்தாளிக் குறிஞ்சி, நட்டபாடை, தக்கராகம், பழந்தக்கராகம, தக்கேசி, குறிஞ்சி, வியாழக்குறிஞ்சி, திருவிராகம். மேகராகக் குறிஞ்சி, யாழ்முரி கொல்லிக்கௌவாணம், செந்துருத்தி, என்பனவாம் :—

ஒவ்வொன்றையும் பண் இந்தளம் பண் சீகாமரம் என்று இப்படியே கூறவேண்டியதா யிருக்கிறது. இப்பண்களைத் தேவாரங்களில் காணுகின்றேமேயன்றி, ஒன்றையாவது பாடு வாரையும், பாடக்கேட்டாரையும் காண்கிலேம். ஆக இக்காலத்தில் தேவாரங்களைப் பாடுகின் றவர் தங்கள் தங்களுக்கும் பொருத்தமான வடமொழிப் பெயராலாகிய இராகங்களை அமைத் துப் பாடுகின்றனர். இப்படிப்பாடுவதற்குக் காரணம் நாளடைவில், தமிழ்ப்பண்களைக் கை சோரவிட்டனர்போலும்.

மேலே காட்டிய பண்ணின் பெயர்வகைகள், இயற்கையாகத் தமிழுக்கு அமைந்த பெயரோ, அல்லது வடமொழிராகப் பெயர்களின் சிதைவோ, இத்தன்மையது என்று அறிந்து கூறுவது அருமையாயிருக்கிறது. ஆயினும் இரண்டொரு ராகம் வடமொழிப் பெயரின் சிதைவாக ஊகிக்கப்படுகிறது. அவை திருவிராகம், நட்டராகம், இவற்றை முறையே ஸ்ரீ ராகம், நாட்டை, என்று இவ்வாறு ஊகிப்பதன்றி வேறின்று. இன்னும் இவ் வகைத் தமிழ்ப் பெயரமைந்த பண்கள் இக்காலத்தில் பெயருந்தெரியாமல் மறைந்து போனவை எவ்வளவோ ?

ஆசிரியர், அடியார்க்குநல்லார், சிலப்பதிகார உரையில் ஓரிடத்தில்

"மலர் மிசைத்திருவினை வலத்தினிலமைத்தவன்
மறிதிரைக் கடலினை மதித்திடவடைத்தவன்
இலகொளித்தடவரை கரத்தினி லெடுத்தவன்
இனநிரைத் தொகைகளை இசைத்தலி லழைத்தவன்
முலையுணத்தருமவள் நலத்தினை முடித்தவன்
முடிகள் பத்துடையவன் உரத்தினை யறுத்தவன்
உலகனைத்தையு மொருபதத்தினி லொடுக்கினன்
ஒளிமலர்க்கழல் தருவதற்கினியழைத்துமே"

என்று ஒரு பாடலைக் கொடுத்து, இது எண் சீரான்வந்த கொச்சக ஒருபோகு என்றும் பண்-கௌசிகம் என்றும் தாளம் இரண்டொத்துடைத்தடாரம் என்றும் கூறியுள்ளார்.

இவ்வடியார்க்கு நல்லார், கம்பர்காலத்துக்கு முந்தியுள்ளார் என்று தெரிகிறது. அல் லது ஒரே காலமாகவும் இருக்கலாம். பிந்தியிருப்பின், கவிச்சக்கிரவர்த்தி என்று பெயர் பெற்ற அக்கம்பரது ராமாயணம் என்னும் பெருங்காவியத்துக்கு உரை செய்யாமலும் அக் காவியத்தைத்தம் உரைநூலுக்கு மேற்கோளாகக் காட்டாமலுமிரார் என்று தமிழ்ப்புலவர் கருதுகின்றமையின் கம்பர் காலத்துக்கு முந்தியுள்ளாரென்றே ஊகித்தற்கிடமாகின்றது. ஆகவே அவ்வடியார்க்கு நல்லார் சற்றேறக்குறைய ஆயிரம் வருஷத்திற்கு முந்தியுள்ளராகின் றனர்.

இவ்வுரையாசிரியர், தாம் பஞ்சகாவியங்களிலொன்றாகிய சிலப்பதிகாரத்துக்கு உரையெழுதத் தொடங்குமுன் உரைச்சிறப்புப் பாயிரத்து, இந்நூல் இயலிசை நாடகப் பொருட்டொடர்நிலைச்செய்யுளென்றும், இயற்றமிழுக்கு இலக்கணம் தொல்காப்பியம் என்றும் கூறிப்பின், இசைநாடகம் என்னும் இரண்டற்கும் இலக்கணமாய் உள்ளநூல் இவையெனக் கூறப்புகுந்தவர். "இசைத்தமிழ் நூலாகிய பெருநாரை, பெருங்குருகு முதலிய பிறவும், தேவரிஷி நாரதர் செய்த பஞ்சபாரதீயம் முதலிய தொன்னூல்களும் இறந்தனவென்றும் முறுவல் சயந்தம், குணநூல் செயிற்றியம் என்னும் நூல்களுள்ளும் ஓரோர்பகுதி சூத்திரங்கள் ஆங்காங்கு நடைபெறுகின்றனவன்றி, முதல், நடு, ஈறுகாணுமையின் அவையுமிறந்தனபோலும் என்றும், கூறிப்பின் தாமெடுத்துக்கொண்ட இசைத்தமிழ்க்கும், நாடகத்தமிழ்க்கும் இலக்கண நூலாக, இசைநுணுக்கமும், இந்திரகாளியமும், பஞ்சமரபும், பரதசேனுபதீயமும், மதிவாணர் நாடகத்தமிழ்நூலும் ஆகிய இவை ஒருவாறு ஒப்புமை நோக்கி, இந்நூலுக்குரையெழுதத்துணிந்ததாம்" என்று கூறியிருக்கின்றனர். இவர் கருத்தை உற்றுநோக்குமிடத்து, இசைத்தமிழ்நூல்கள் அவர் காலத்திலேயே இறந்தனவென்றும், அவர் ஆதாரமாகக்கொண்ட இசைநுணுக்கம், முதலிய இசைத்தமிழ்நூலும் ஒருவாறு ஒப்புமையேயன்றி முற்றும் ஒப்புமையில்லையெனத் தெரிகிறது. இதனுல் நாளடைவில் தமிழ்ப்பண்கள் சரியானபடி பாடப்படாமல் மறைவுபட்டன. இறந்துபோன பாஷையென்று சொல்லப்படாமல் எப்போதும் பேசப்பட்டு உலாவிவரும் நம் தமிழ்ப்பாஷையில் பண்கள் முற்றும் இவ்வாறு மறைவுண்டும், சிதைவுண்டுமிருக்குமாயின், இறந்துபோயின என்று சொல்லப்பட்டுப் பேசப்படாமலிருக்கிற வடமொழியில் உள்ள சங்கீதங்கள் முன்னுள்ள இந்துராஜாக்கள் காலங்களில் பெருமையடைந்து இக்காலத்தில் எத்துணை மலினமடைந்திருக்கின்றனவோ அறியேம்.

சபையோர்களே ! முக்கியமான விஷயம் ஒன்று கூறவேண்டியதாயிருக்கிறது. அதாவது முற்காலத்தில் நம் தமிழ்நாட்டின் கண் வதிந்து வந்த தமிழ்மொழியிலும், வடமொழியிலும், இரண்டினும் வல்ல இசைப்பாவலர் யாவரும் ஒன்றுகூடி தங்கள் தங்கள் அபிப்பிராயங்களை வெளிப்படுத்தி வடமொழியில் இல்லாமல் தமிழில் வழங்கும் அரியதமிழ் ராகங்களை அப்பெயரானே வடமொழியிற்கொண்டும், அப்படியே தமிழில் இல்லாமல் வடமொழியிற் பயின்றுவரும் சில ராகங்களை அப்படியே வடமொழிப்பெயரானும், வடமொழிச்சிதைவானும் தமிழிற்கொண்டும் இப்படியே சங்கீதங்களை பலபடச் செவ்வனே விருத்திபண்ணியிருக்கிறார்கள். உதாரணமாக, குறிஞ்சியென்னும் பண்ணை அப்பெயரானே குறிஞ்சி ராகமெனக் கொண்டனர். எங்ஙனமென்னில் "குறிஞ்சி" என்னும் பெயர் தமிழில் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்னும் நால்வகைப் பெயரில் குறிஞ்சியென்பது மலையும் மலைச்சார்ந்ததுமாகிய நிலப்பெயர் என்றும் இந்நிலப்பெயரால் குறிஞ்சிப்பண் என்று ஒன்றுண்டென்று, பண்ணினிலக்கணங் கூறுமிடத்துக் கூறியிருக்கின்றதாதலின், இக்குறிஞ்சியென்னும் ராகம் தமிழ்க்கே உரியதென்றும் வடமொழிப்புலவர் தங்கள் சங்கீதத்தில் சேர்த்துக்கொண்டனர் என்றும் கொள்ளக்கிடக்கின்றமை காண்க; இவ்வாறே ஸ்ரீராகம், என்பதைத் தமிழில் திருவிராகம் என மாற்றியும், காந்தாரம், காந்தார பஞ்சமம், பஞ்சமம் என்பவற்றை அப்படியே தமிழில் அமைத்தும் கொண்டனரென்றும் தெரியவருகிறது.

இதுவரைக்கும் கூறிவந்ததன் நோக்கம் என்னவெனில் சங்கீத வெள்ளத்துத் திளைத்தாடும் மதயானைபோன்ற நம்முன்னேர்களிருந்த தமிழ்நாட்டில் பின்னுள்ளார் யாது காரணத்தாலோ நாளடைவில், இசைத்தமிழைக் கைச்சோரவிட்டதாக நமக்குத் தெரிகின்றதல்லவா ?

ஆதலால் இனியாவது அப்படி விட்டுவிடாமல் சங்கீதத்தை ப்ரபலப்படுத்தி யாவரும் கரதலாமலகமாக இனிதுணரும்படி நாம் செய்யவேண்டுமென்ற நோக்கத்தோடு, இக்காலத்தில் காலக் கழிவையும், பொருட் செலவையும் பாராது உதவி வருகின்ற நமது ராவ் சாஹேப் மகா-ா-ா-ஸ்ரீ ஆபிரகாம் பண்டிதர் நீடூழி வாழ்கவென்று கருணை வள்ளலாகிய கடவுளை நாம் வாழ்த்துவதோடு, இவ்வாறே அடிக்கடி கூடும் சங்கீத சபையில் அவ்வக்காலங்களில் சங்கீத சாஹித்திய நிபுணர்கள் வந்திருந்து தாம் கண்டறிந்த சங்கீத நுட்பங்களை வெளிப்படுத்தி நமக்குப் பேருதவி செய்வார்களென்று எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுவோமாக. சுபம். சுபம்.

# தியாகராஜஸ்வாமிகள் சரித்திரம்.

மகா-ா-ா-ஸ்ரீ நாகராஜ பாகவதர் அவர்களால் பாடிக்கப்பட்டது :—

சோழமண்டலத்தில் திருவையாறு என்ற புண்ணிய க்ஷேத்திரத்தில் பிராம்மணகுலம், தெலுங்கு ஜாதியில் முருகிநாடு என்னும் வகுப்பில் ராமப்ரம்மம் என்ற ஒருவர் சாந்தை என்னும் பத்தினியோடுகூட ராமபஜனை செய்துகொண்டு, உஞ்சவிருத்திசெய்து ஜீவித்துவந்தார். இவருக்கு இரண்டு புத்திரர்கள் பிறந்தார்கள். அதில் மூத்தவனுக்கு ஜப்யேசன் என்றும் பின்னவனுக்கு த்யாகராஜன் என்றும் பெயரிட்டார்கள். இருவர்களுக்கும் கிரமப்படி சரியான காலத்தில் வேதவிதிப்படி உபநயனத்தை முடித்து தமது தாய் பாஷையாகிய தெலுங்கும் சமஸ்கிருதமும் சொல்லிவைத்தார்கள். அதில் மூத்தவன் மந்தபுத்தியுடையவனும் மிகவும் துஷ்டனுமிருந்தான். இரண்டாவது புத்திரனை த்யாகராஜஸ்வாமி என்பவர் பாலியத்திலேயே ஞானவைராக்கியங்களையுடையவராய் தன் தந்தையைப்போலவே ராமபக்தியில் சிறந்தவராய் அவ்வூரிலுள்ள சங்கீத வித்வானை சொண்டி வீணை வெங்கடரமணதாஸ் என்பவரிடம் சங்கீத முறைப்படி தெரிந்துகொண்டு தெலுங்கிலேயும் சமஸ்கிருத்திலும் சாஹித்ய ஞானத்தை அடைந்தார். ஸ்ரீராமரது கல்யாண குணங்களை ஆதியில் வால்மீகி மஹாமுனிக்கு நாரதரால் ஸ்ரீராம நாமாவை உபதேசிக்கப்பட்டு அவர் இராமாயணத்தை இருபத்துநாலாயிரம் கிரந்த கீர்த்தனங்களாகச்செய்து குசலவாளைக்கொண்டு இராமர் சன்னிதானத்தில் கானரூபமாகப் பாடச்செய்தார். அந்த அபிப்பிராயப்படி வால்மீகி மஹாமுனியின் அம்சமே என்று சொல்லும்படியான ஸ்ரீ தியாகராஜஸ்வாமிகள் தாமும் இருபத்துநாலாயிரம் கீர்த்தனங்களாக ராமனது கல்யாண குணங்களைப்பாடக்கருதி "கிரிராஜஸுதா" என்ற கீர்த்தனத்தால் விநாயகரை துதித்தார். அதின் பிறகு சமயோசிதமாக அநேக கீர்த்தனங்களைப் பாடியிருக்கிறார். தம்புத்திரர் இருவர்களுக்கும் விவாகத்தை முடித்துவிட்டு ராமப்ரம்மம் என்னும் சாதுபரகதி அடைந்தார். அதின் பிறகு சகோதரர்களுக்குள் ஒத்துமையில்லாமல் தமது கிரகத்தில் சரிபாதியையும் பரம்பரையாக பூஜித்து வந்த ஸ்ரீராம விக்ரகம் முதலியவற்றையும் தாம் வைத்து பூஜித்து வந்தார். சில நாளைக்குப்பிறகுதான் சற்குருவை அடைய விரும்பி ஸ்ரீநாரத முனிவரை தியானித்து "குருலேகயெடுவண்டி குணிகிதெலியக போனு" என்னும் கீர்த்தனங்களைப் பாடினார்.

குருவில்லாமல் எவ்வித சாமர்த்தியமும் நிறைவேறாது என்ற அபிப்பிராயத்தை வெளியிட நாரதமுனிவர் சன்யாசியைப்போல இவர் கிரகத்திற்கு வந்தார். வந்தவரை நமஸ்கரித்து த்யாகராஜஸ்வாமிகள் நிற்க, நாரதர் இவரை நோக்கி ராமகுணங்கள் நிறைந்த உனது சங்கீத சாஹித்யங்களைக் கேழ்க்கவேணுமென்று சொல்ல, த்யாகராஜஸ்வாமிகள் வந்த பெரியவர் நாரதராகத்தான் இருக்கவேண்டுமென்று ஊகித்து "நாரதகுருஸ்வாமி ஸ்ரீநாரத வரநாரத" என்னும் கீர்த்தனங்களைப் பாடவே, சன்யாசி அதைக்கேட்டு இவன் தன்னைத் தெரிந்துகொண்டானென்று எண்ணி, த்யாகராஜஸ்வாமிகளுக்கு ஸ்ரீராமதாரக மந்திரத்தை உபதேசிக்க அவர் ஆனந்தத்தை அடைந்து "எந்த பாக்யமோ இதேபாக்யமு, தியானமே மும்மூர்த்தலு சந்தேக முதிர்ப்புமு" என்னும் கீர்த்தனங்களைப்பாட சன்யாசி அவற்றைக்கேட்டு தன்னிடத்திலிருந்த ஸ்வரார்ணவம் என்னும் சங்கீத நூலை அவருக்கு கொடுத்து மறைந்தார். அந்த புஸ்தகத்திலுல்தான் சந்தேகங்களிலிருந்தும் விடுபட்டு சங்கீத சாஹித்யங்களில் அதிக நிபுணரானார். அதின் பிறகு பிரம்மாதி தேவர்களும் சித்தர்களும் எந்த நாதத்தை மேலானதாகக்கருதி உபாஸித்து மோட்சத்தை அடைந்தார்களோ அப்படி தானும் நாதோபாசனையைச் செய்து ஜனங்களுக்கும் உபகாரமாகும்படி "நாதோபாசன ஸ்வரராகஸுதாரஸ—கீதார்த்தமு சங்கீத முக்யானமு—மோக்ஷமுகலதா" என்னும் கீர்த்தனங்களைப் பாடியிருக்கின்றார். அந்த க்ஷேத்திரத்திலுள்ள தக்ஷிண கைலாசமென்னும் ஆலயத்துக்கு தன் பத்தினி சகிதம்போய் நாள் ஒன்றுக்கு லட்சத்து எண்பதினாயிரம் ராம நாமாக்களை உச்சரித்து பகவதர்ப்பணம் செய்து வந்தார். அவ்வாறு ராமபஜனத்தில் உண்டாகும் மேன்மையைச் சிறப்பித்து பக்தி புகட்டும்படியான "அப்பராமபக்தி-ஸ்மரணே ஸுகமு-ராமபக்தி சாம்பிராஜ்யமு" என்னும் அநேக கீர்த்தனங்களினால் ராமனைப் புகழ்ந்துபாடித்தான் ஆனந்தித்தார். "தெலியலேருராமா நடசி நடசி" முதலிய கீர்த்தனங்களினால் பக்திரசத்தை அறியாதவர்களைக்குறித்து பரிதாபமடைந்தார்.

இவ்விதம் 96 கோடி ராம நாமாக்களை உச்சரித்து முடிந்த தினத்தில் ஸ்ரீராமர் தன் பரிவாரங்களுடன் கனவில் தரிசனங்கொடுக்க மனமகிழ்ச்சியடைந்து "கிரிபைநெல கொன்னருமுனி-தொரகுனயிடுவெண்ட்டி" முதலிய கீர்த்தனங்களைப் பாடினார். இப்படி அநேக கீர்த்தனங்களை அநேகம் சிஷ்யர்களுக்கு உபகாரமாகச் சொல்லிக்கொடுத்துக் கொண்டிருக்கும்போது ஒருநாள் மூத்தவனான ஜப்யேசன் என்பவன் த்யாகராஜஸ்வாமிகளுக்கு உயிர்போல விளங்கும் சீதா லட்சுமணராம அனுமன் முதலிய மூர்த்திகளை தன் துஷ்டர்களுடன்கூட திருடி எடுத்துக் கொண்டுபோய் காவேரியின் வெள்ளத்தில் போட்டுவிட்டான். அப்போது தியாகராஜஸ்வாமிகள் நடந்ததை நினைத்து "எந்துதாகினாடோ" "எந்தரானி-குலபிருதுனு" முதலிய கீர்த்தனங்களால் பாடி ஒருவருஷம் வரையில் பிரலாபித்துக்கொண்டிருந்தார். ஒருநாள் ராமன் இவர் கனவில் தோன்றி தானிருக்குமிடம் தெரிவிக்க காவேரியில் மணலில் தோண்டி மூர்த்திகளை எடுத்து "ராராமாயிண்டிதாக-அலகலெல்ல-ஏபனிகோ" என்னும்கீர்த்தனங்களைப்பாடி திருப்தி அடைந்தார். பிறகு தமையனுக்கும் நற்புத்தி உண்டாகவேண்டுமென்று பகவானைப் பிரார்த்தித்து அதனால் இவரோடு அவரும் நற்புத்தி அடைந்து ராமபஜனை செய்துவந்தார். சில நாளைக்குப்பிறகு தன் பத்தினி பரகெதி அடைந்தபிறகு அந்த உத்தமியாகிய மனைவியின் பிரிவை நினைத்து "தொலிஜன்மமுன-ஏபாபமு" முதலிய கீர்த்தனங்களைப்பாடி சமாதானமடைந்தார். ஒரு சமயம் தஞ்சாவூர் அரசன் இவரை வரவழைக்க ஏற்பாடுசெய்ய இவர் ராஜசமுகத்தைப் பார்க்க மனமில்லாதவராய் "நிதிசாலாஸுகமா"—ராமுனிஸந்நிதிஸேவஸுகமா-என்ற கீர்த்தனத்தினால் நரஸ்துதி செய்ய மனமில்லாதவராய் தனது சங்கீதத்தை பகவதர்ப்பணம் செய்துகொண்டிருந்தார். இவர் தனது சிஷ்யர்களுடன் அநேக திவ்ய க்ஷேத்திரங்களுக்குப்போய் அவ்வவ்விடங்களில் அநேக கீர்த்தனங்களைப்பாடி திருவையாற்றுக்கு திரும்பிவந்து பிரகலாத விஜயம் முதலான நௌகாசரித்திரம் பக்தி விஜயம் முதலான கீர்த்தனங்களையும் பாடி 88-வது வயதில் "ஞானமொஸகராதா க்ருபஜூசுடகு இதிசமயமுரா" என்னும் கீர்த்தனங்களால் தனக்கு மோட்சமளிக்கவேணுமென்று மனம் கரைந்து ராமனைப் பிரார்த்திக்க அவர் மறுபடி இவர் கனவில் தோன்றி "சன்யாசம் வாங்கிக்கொள். இன்றைக்கு 7-வது தினத்தில் முக்தி அளிக்கிறே"னென்று உத்திரவளிக்க வேதவிதிப்படி கிரகத்தில் சன்யாசம் வாங்கிக்கொண்டு பகவான் நியமித்ததினமாகிய கலி 4948-வது ஆண்டாகிய பராபவ வருஷம் புஷ்யபகுள பஞ்சமி திதியில் பிரம்மஸ்வரூபமாய்ப் பிரகாசித்தார். உடனே அவர் சிஷ்யர்கள் சன்யாச விதிப்ரகாரம் காவேரிநதி தீரத்தில் சமாதிசெய்து யகாபிஷேகம் செய்வித்தார்கள். அந்த சமாதி ஸ்தலம் இப்போதும் பிரகாசித்துக்கொண்டிருக்கிறது. இனியும் அதிகப்பிரகாசத்துக்கு வரப்போகிறது. இவர் தன் ஜீவியகால முழுமையும் பரோபகாரமாகவே எல்லாருக்கும் தனது கீர்த்தனங்களை எளிதில் உணரும்படி அநேக சிஷ்யர்களுக்கு கற்பித்திருக்கிறார். அவர் கருத்தை அறிந்த சங்கீத வித்வான்களும் ஷை கீர்த்தனங்களை நன்றாய் பரிசீலனைசெய்து தனக்கு தெரிந்த விஷயங்களையும் பிறருக்கு நன்றாய் உபயோகப்படும்படி செய்யவேண்டுமென்பது கருத்து. ஸங்கீத சாஸ்தர அபிவ்ருத்திக்கு ஸ்ரீ த்யாக ப்ரமஹத்தின் சரித்திரத்தை சொல்வதும் கேட்பதும் ஓர் முக்கிய காரணம். மேலும், ஸங்கீத வித்தையின் பாண்டித்யம் இவ்விதமாக விளங்கவேண்டுமென்பதை இந்த மஹானால் தெரிந்துகொள்ளுகிறோம்.

---

பூவனூர் மகா-ா-ா-ஸ்ரீ பிரதாப ராமஸ்வாமி பாகவதர் அவர்களால் பாடிக்கப் பட்டது.

## வீரமாமுனிவர் செய்த சதுரகராதி.

இந்த சதுரகராதியின் தொகையகராதியில் இசை என்னுமிடத்தில் விவரித்திருக்கின்ற ஸங்கீத விஷயத்தை இதனடியில் வருமாறு வெளியிடுகிறேன். இதன் பின்னுள்ளவை அகராதியில் பார்க்கலாம். ஆகையால் விடப்பட்டது.

1. இசை—3—மந்தரம் மத்யமம் தாரம்.

2. இசை—7—குரல்-துத்தம்-கைக்கிளை-உழை-இளி-விளரி-தாரம்.

### மேற்படி க்ரந்தத்திற் கூரிய மத்யமேள வீணை.

மேரு.

பக்கத்தந்திகள்.

(3) தாரஷட்ஜம்.
(2) மத்ய பஞ்சமம்.
(1) மத்ய ஷட்ஜம்.

| | மத்ய ஸ. | மந்தர ப. | மந்தர ஸ. | அநுமந்தர ப. தந்தி. |
|---|---|---|---|---|
| 1. | சு. ரி. | சு. தா. | சு. ரி. | சு. தா. |
| 2. | சு. கா. | சு. நி. | சு. கா. | சு. நி. |
| 3. | ஸா.கா. | கை.நி. | ஸா.கா. | கை. நி. |
| 4. | ல. மா. | ல.ஸா. | ல. மா. | ல. ஸா. |
| 5. | சு. மா. | சு.ஸா. | சு. மா. | சு. ஸா. |
| 6. | ல. பா. | சு. ரி. | ல. பா. | சு. ரி. |

ஸாரிகை என்றால் வீணையின் குறுத்து மெட்டுகள்—

இந்த விரண்டு வீணையிலக்ஷணம்போலவே இராகவிபேதத்திலுஞ் சொல்லியிருக்கிறார்.

# ஸத்ராக சந்த்ரோதயத்தில் சொல்லப்பட்ட

## வீணை பதகம்.

### சுத்தமேள வீணை.

மேரு.

பக்கத்தந்திகள்.

(1) மத்ய ஷட்ஜம்.

(2) மந்த்ர பஞ்சமம்.

(3) மந்த்ரஷட்ஜம்.

| | மந்த்ர ம | மந்த்ர ஸ. | அநுமந்த்ர ப. | அநுமந்த்ர ஸ. தந்தி. |
|---|---|---|---|---|
| 1. | ல. பா. | சு. ரி. | சு. தா. | சுத்த. ரி. |
| 2. | சு. பா. | சு. கா. | சு. நி. | சுத்த. கா. |
| 3. | O. | ஸா.கா. | கை. நி. | ஸாதா.கா. |
| 4. | சு. தா. | ல. மா. | ல. ஸா. | லகு. மா. |
| 5. | சு. நி. கை.நி. | சு. மா. | சு. ஸா. | சுத்த. மா. |
| 6. | ல. ஸா. | ல. பா. | சு. ரி. | லகு. பா. |

(1) முதல் (6) வரையிலுமுள்ள குறுக்குக்கோடுகள், ஸாரிகைகள்.

# ஸங்கீத ரத்னாகரத்தின் பிரகாரம்
## சுத்த விக்ருத ஸ்வர விவரம்.

| ச்ருதி நம்பர். | சுத்த ஸ்வரத்தின் பெயர். | விக்ருத ஸ்வரத்தின் பெயர். | விக்ருத ஸ்வரங்களின் ச்ருதி விவரம். | 32-அங்குலத்தில் சுத்த ஸ்வரத்தின் பாகக் கணக்கு. |
|---|---|---|---|---|
| 1 | | 1. கைசிக நிஷாதம். | மூன்று ச்ருதியுள்ளது. | |
| 2 | | 2. காகலி நிஷாதம். | நான்கு ச்ருதியுள்ளது. | |
| 3 | | 3. ச்யுத ஷட்ஜம். | இரண்டு ச்ருதியுள்ளது. | |
| 4 | 1. சு. ஷட்ஜம். | 4. அச்யுத ஷட்ஜம். | இரண்டு ச்ருதியுள்ளது. | 32 |
| 5 | | | | |
| 6 | | | | |
| 7 | 2. சு. ரிஷபம். | 5. சதுச்ருதி ரிஷபம் விக்ருத ரிஷபம். இரண்டு பெயரும் ஒன்றுதான். | நான்கு ச்ருதியுள்ளது. | 10/9 |
| 8 | | | | |
| 9 | 3. சு. காந்தாரம். | | | 32/27 |
| 10 | | 6. ஸாதாரண காந்தாரம். | மூன்று ச்ருதியுள்ளது. | |
| 11 | | 7. அந்தர காந்தாரம். | நான்கு ச்ருதியுள்ளது. | |
| 12 | | 8. ச்யுத மத்யமம். | இரண்டு ச்ருதியுள்ளது. | |
| 13 | 4. சு. மத்யமம். | 9. அச்யுத மத்யமம். | இரண்டு ச்ருதியுள்ளது. | 4/3 |
| 14 | | | | |
| 15 | | | | |
| 16 | | 10. த்ரிச்ருதி பஞ்சமம். | மூன்று ச்ருதியுள்ளது. | |
| | | 11. கைசிக பஞ்சமம். தனித்தனிப் பெயர். | நான்கு ச்ருதியுள்ளது. | |
| 17 | 5. சு. பஞ்சமம். | | | 3/2 |
| 18 | | | | |
| 19 | | | | |
| 20 | 6. சு. தைவதம். | 12. சதுச்ருதி தைவதம். விக்ருத தைவதம். இரண்டுபெயரும் ஒன்றுதான். | நான்கு ச்ருதியுள்ளது. | 5/3 |
| 21 | | | | |
| 22 | 7. சு. நிஷாதம். | | | 16/9 |

ஆக சுத்த ஸ்வரங்கள் 7. } ஆக விக்ருத ஸ்வரங்கள் 12.

ஆக சுத்த விக்ருத ஸ்வரங்கள் 19.

## ஸங்கீத பாரிஜாதத்தின் பிரகாரம் சுத்த விக்ருத ஸ்வரங்களின் விவரம்.

| சுருதி நம்பர். | சுத்த ஸ்வரத்தின் பெயர். | விக்ருத ஸ்வரத்தின் பெயர். | விக்ருத ஸ்வரத்தின் பெயர். |
|---|---|---|---|
| 1 | | | 1. பூர்வ ரிஷபம். |
| 2 | | 1. கோமல ரிஷபம். | |
| 3 | 1. சுத்த ரிஷபம். | | 2. பூர்வ காந்தாரம். |
| 4 | | | 3. தீவ்ர ரிஷபம். |
| 5 | 2. சுத்த காந்தாரம். | | 4. தீவ்ரதர ரிஷபம். |
| 6 | | 2. தீவ்ர காந்தாரம். | |
| 7 | | | 5. தீவ்ரதர காந்தாரம். |
| 8 | | | 6. தீவ்ரதம காந்தாரம். |
| 9 | 3. சுத்த மத்யமம். | | 7. அதிதீவ்ரதம காந்தாரம். |
| 10 | | | 8. தீவ்ர மத்யமம். |
| 11 | | 3. தீவ்ர மத்யமம். | |
| 12 | | | 9. தீவ்ரதம மத்யமம். |
| 13 | 4. சுத்த பஞ்சமம். | | 10. அதிதீவ்ரதம மத்யமம். |
| 14 | | | 11. பூர்வ தைவதம். |
| 15 | | 4. கோமல தைவதம். | |
| 16 | 5. சுத்த தைவதம். | | 12. பூர்வ நிஷாதம். |
| 17 | | | 13. தீவ்ர தைவதம். |
| 18 | 6. சுத்த நிஷாதம். | | 14. தீவ்ரதர தைவதம். |
| 19 | | 5. தீவ்ர நிஷாதம். | |
| 20 | | | 15. தீவ்ரதர நிஷாதம். |
| 21 | | | 17. தீவ்ரதம நிஷாதம். |
| 22 | 7. தாரஷட்ஜம். | | 17. அதிதீவ்ரதம நிஷாதம். |

ஆக சுத்தஸ்வரங்கள் 7. ஆக விக்ருதஸ்வரங்கள் 5. ஆக விக்ருதஸ்வரங்கள் 17.

ஆக சுத்த விக்ருத ஸ்வரங்கள் 29.

| | ஸ்வராக சந்த்ரோதயத்தின் பிரகாரம் சுத்த விக்ருத ஸ்வர விவரம். | | இராக விபோதத்தின் பிரகாரம் சுத்த விக்ருத ஸ்வர விவரம். | |
|---|---|---|---|---|
| ச்ருதி நம்பர். | சுத்த ஸ்வரம். | விக்ருத ஸ்வரம். | சுத்த ஸ்வரம். | விக்ருத ஸ்வரம். |
| 1 | | 1. கைசிக நிஷாதம். | | 1. கைசிக நிஷாதம். |
| 2 | | 2. காகலி நிஷாதம். | | 2. காகலி நிஷாதம். |
| 3 | | 3. லகு ஷட்ஜம். | | 3. ம்ருது ஷட்ஜம். |
| 4 | 1. சு. ஷட்ஜம். | | 1. சு. ஷட்ஜம். | |
| 5 | | | | |
| 6 | | | | |
| 7 | 2. சு. ரிஷபம். | | 2. சு. ரிஷபம். | |
| 8 | | 4. சதுச்ருதி ரிஷபம். O | | 4. தீவ்ர ரிஷபம். |
| 9 | 3. சு. காந்தாரம். | | 3. சு. காந்தாரம். | |
| 10 | | 5. ஸாதாரண காந்தாரம். | | 5. ஸாதாரண காந்தாரம். |
| 11 | | 6. அந்தர காந்தாரம். | | 6. அந்தர காந்தாரம். |
| 12 | | 7. லகு மத்யமம். | | 7. ம்ருது மத்யமம். |
| 13 | 4. சு. மத்யமம். | | 4. சு. மத்யமம். | |
| 14 | | 8. பஞ்சச்ருதி மத்யமம். O | | |
| 15 | | | | 8. தீவ்ரதர மத்யமம். |
| 16 | | 9. லகு பஞ்சமம். | | 9. ம்ருது பஞ்சமம். |
| 17 | 5. சு. பஞ்சமம். | | 5. சு. பஞ்சமம். | |
| 18 | | | | |
| 19 | | | | |
| 20 | 6. சு. தைவதம். | | 6. சு. தைவதம். | |
| 21 | | 10. சதுச்ருதி தைவதம். O | | 10. தீவ்ர தைவதம். |
| 22 | 7. சு. நிஷாதம். | | 7. சு. நிஷாதம். | |

ஆக சுத்த ஸ்வரங்கள் 7. ஆக விக்ருதஸ்வரங்கள் 10 இந்த-(O) அடையாளமுள்ள மூன்று ஸ்வரங்களும் லக்ஷயத்தில் வழங்குகின்றனவென்று சொல்லுகிறார்.

ஆக சுத்த விக்ருத ஸ்வரங்கள் 17.

ஆக சுத்த ஸவரங்கள் 7. ஆக விக்ருத ஸ்வரங்கள் 10.

ஆக சுத்த விக்ருத ஸ்வரங்கள் 17.

# ஸ்வரமேல கலாநிதிப் பிரகாரம் சுத்த விக்ருதஸ்வர விவரம்.

| ச்ருதி கம்பர். | சுத்த ஸ்வரம். | விக்ருத ஸ்வரம். | விக்ருத ஸ்வரம். |
|---|---|---|---|
| 1 | | 1. கைசிக நிஷாதம். | 1. ஷட்ச்ருதி தைவதம். |
| 2 | | 2. காகலி நிஷாதம். | |
| 3 | | 3. ச்யுத ஷட்ஜ நிஷாதம். | |
| 4 | 1. சு. ஷட்ஜம். | | |
| 5 | | | |
| 6 | | | |
| 7 | 2. சு. ரிஷபம். | | |
| 8 | | | |
| 9 | 3. சு. காந்தாரம். | | 2. பஞ்சச்ருதி ரிஷபம். |
| 10 | | 4. ஸாதாரண காந்தாரம். | 3. ஷட்ச்ருதி ரிஷபம். |
| 11 | | 5. அந்தர காந்தாரம். | |
| 12 | | 6. ச்யுத மத்யம காந்தாரம். | |
| 13 | 4. சு. மத்யமம். | | |
| 14 | | | |
| 15 | | | |
| 16 | | 7. ச்யுத பஞ்சம மத்யமம். | |
| 17 | 5. சு. பஞ்சமம். | | |
| 18 | | | |
| 19 | | | |
| 20 | 6. சு. தைவதம். | | |
| 21 | | | |
| 22 | 7. சு. நிஷாதம். | | 4. பஞ்சச்ருதி தைவதம். |

ஆக சுத்த ஸ்வரங்கள் 7. ஆக விக்ருத ஸ்வரங்கள் 7.

மேற்கண்ட சுத்த விக்ருத ஸ்வரங்களிலேயே இந்த நான்கு விக்ருத ஸ்வரங்களையுங்குறிப்பிட்டிருக்கிறார்.

ஆக சுத்த விக்ருத ஸ்வரங்கள் 18.

| | சதுர்தண்டிப்ரகாசிகா. | | ஸங்கீத ஸாராம்ருதம். | |
|---|---|---|---|---|
| ச்ருதி நம்பர். | சுத்த ஸ்வரம். | விக்ருத ஸ்வரம். | சுத்த ஸ்வரம். | விக்ருத ஸ்வரம். |
| 1 | | 1. கைசிக நிஷாதம்.<br>2. ஷட்ச்ருதி தைவதம். | | 1. கைசிக நிஷாதம்.<br>2. ஷட்ச்ருதி தைவதம். |
| 2 | | ... ... ... ... | | ... ... ... |
| 3 | | 3. காகலி நிஷாதம். | | 3. காகலி நிஷாதம். |
| 4 | 1. சு. ஷட்ஜம். | | 1. சு. ஷட்ஜம். | |
| 5 | | | | |
| 6 | | | | |
| 7 | 2. சு. ரிஷபம். | | 2. சு. ரிஷபம். | |
| 8 | | | | |
| 9 | 3. சு.காந்தாரம். | 4. பஞ்சச்ருதி ரிஷபம். | 3. சு.காந்தாரம். | 4. பஞ்சச்ருதி ரிஷபம். |
| 10 | | 5. ஸாதாரண காந்தாரம்.<br>6. ஷட்ச்ருதி ரிஷபம். | | 5. ஸாதாரண காந்தாரம்<br>6. ஷட்ச்ருதி ரிஷபம். |
| 11 | | ... ... ... ... | | |
| 12 | | 7. அந்தர காந்தாரம். | | 7. அந்தர காந்தாரம். |
| 13 | 4. சு. மத்யமம். | | 4. சு. மத்யமம். | 8. சு. மத்யம காந்தாரம். |
| 14 | | | | |
| 15 | | | | |
| 16 | | 8. வராளி மத்யமம். | | 9. விக்ருதபஞ்சமமத்யமம் |
| 17 | 5. சு. பஞ்சமம். | | 5. சு. பஞ்சமம். | |
| 18 | | | | |
| 19 | | | | |
| 20 | 6. சு. தைவதம். | | 6. சு. தைவதம். | |
| 21 | | | | |
| 22 | 7. சு. நிஷாதம். | 9. பஞ்சச்ருதி தைவதம். | 7. சு. நிஷாதம். | 10.பஞ்சச்ருதி தைவதம் |

ஆக சுத்த ஸ்வரங்கள் 7. ஆகவிக்ருத ஸ்வரங்கள் 9.

ஆக சுத்த விக்ருத ஸ்வரங்கள் 16.

ஆக சுத்த ஸ்வரங்கள் 7. ஆக விக்ருத ஸ்வரங்கள் 10.

ஆக சுத்த விக்ருத ஸ்வரங்கள் 17.

# பைரவி ராக ஆராய்ச்சியின் விவரம்.

கும்பகோணம் பிரம்மஸ்ரீ ராதாகிருஷ்ண பாகவதர் அவர்களால் படிக்கப்பட்டது.

நாதாஸ்யேஸ்து பரம்பாரம்
நஜுநாதி ஸரஸ்வதீ
அத்யாபி மஜ்ஜனபயாத்
தும்பம்வஹதி வக்ஷஸி.

உத்ப்ரேக்ஷச்லோகமாதலால் பாவத்தை ஸங்க்ரஹமாக எழுதப்பட்டிருக்கிறது.

1. இந்த ச்லோகத்தினால் ஸாக்ஷாத் ப்ருகதீச்வரியாகிய ஸரஸ்வதீதேவி நாத ஸமுத்திரத்தை அடைந்து கரைகாணவேணுமென்று வீணைதண்டத்துடன் அத்யாபி வியவஹரித்துக்கொண்டிருப்பதாக யெழுதப்பட்டிருக்கிறது.

2. இப்பேர்ப்பட்ட நாதஸம்மந்தமான விஷயத்தைப் புரோகிராமில்கண்ட பைரவி ராக ஸம்மந்தமாக நான் என்ன பேசப்போகிறேன். ஆகிலும் ஸபையோர்களுடைய அபிமானமே தெய்வ ஸாந்நித்தியமென்று நினைத்து பேசத்துணிந்தேன்.

3. இறையில்லாத கிணரைப்போலவும் பாசநபிரசனமில்லாத நதீதீர்த்தத்தைப் போலவும் இக்காலத்திலுள்ள ஸங்கீத வித்வான்களுடைய நிலைமையாயிற்று. ஆயினும் அதினுடைய பலகாலத்துக்கு இதேஸமயமென்று தோணுகிறது. ஆனால் இந்த காலத்தில் ராவ் ஸாஹேப் மு. ஆபிரகாம் பண்டிதர் அவர்களால் ஏற்படுத்தப்பட்ட இந்த ஸபையில் அடியில்கண்ட உதாரணம்போல் ஆகிறது. அசோஷ்யமான காவேரி தீர்த்தமானது மைசூர் இலாகாவிலிருந்து பிரவஹித்து வருவதாக இருந்தாலும் தஞ்சாவூர் முதலான சோழ தேசங்களில் அதை அனுபவித்து வருவதினால் ஜனங்களுக்கு ஸஸ்யவிருத்தி ரூபமாக புலப்படுகிறது. அதைப்போலவே ஸங்கீத ஸாகரத்தில் வித்வான்களாகிற நதீ பிரவாஹத்துக்கு சோழதேசம் முதலான ஸாரக்ஷேத்திரம் புண்ணிய பூமியுள்ளவும் நமது மித்திரர்களாயுள்ளவும், மு. ஆபிரகாம் பண்டிதர் அவர்களுடைய ஸபையாகிற பூமியில் பிராசனம் ஏற்படுவதால், ஸஸ்யவிருத்தி ஸ்தானமாயுள்ள மேற்படி ஸங்கத்தின் உண்மையான மார்க்கங்கள் ஒருவாறாக வெளிப்பட்டு ஸங்கீதக்யான ஸாரத்தை அடைந்து புருஷார்த்த சதுஷ்டயத்துக்கு காரணமாக கீழ்க்கடையில் ஏற்படப்போகிற வித்வான்களுக்கு பலிக்கப்போகிறது மன்னியில் என்னைப்போலொத்த ஆக்யர்களுக்கும் முயற்சியை ஜாஸ்தியாக எடுத்துக்கொண்டு குடும்ப சிரமத்தைத்தவிர்த்த காலத்தில் ஏற்படும் பரிசீலனையைக்கொண்டு மேன்மேல் க்யானானந்தம் ஏற்படும்படிக்குள்ள க்யானத்தைக்கொடுத்த ஜகன்னியந்தாவாயுள்ள ஈச்வரனுக்கு என்னுடைய வந்தனங்களை அளித்தவனாயிருக்கிறேன்.

4. ஜகத்தில் மேற்படி ஸங்கீத சாஸ்திரத்தைப்பத்தி ஒவ்வொருவர் எழுதும் காலத்தில் அவரவர்களுடைய அடையாளமாய் உள்ள மார்க்குகள் ஒவ்வொருவிதமாக இருப்பதைப் போல் என்னுடைய மார்க்கு ஸம்மந்தமாக ஏற்கனவே முதல் கான்பரென்ஸில் கொடுத்த நாட்டைராக ஸம்மந்தமான (12) ச்ருதி (22) ச்ருதியின் மார்க்குகள் சென்ற மூன்றாவது கான்பரென்ஸ் ரிபோர்ட்டில் பிரசுரிக்கப்பட்டிருக்கலாமென்று நம்பி இந்த பாகங்களை குறைத்துக்கொண்டேன். ஆகிலும் ஸங்கிரஹமாகச் சொல்லுகிறேன்.

ஸ்வரங்கள் 7.

ஸ, ரி, க, ம, ப, த, நீ.

ஸ, பா இரண்டு ஸ்தானம். பாக்கி ஐந்து ஸ்வரமும் ஒவ்வொன்றுக்கு இரண்டு ஸ்தானமாகவும் ஆக (12) ஸ்தானமாக ஜகத்தில் அநேகமாக விளங்கிவருகிறது. இந்த ஸ்தானங்களுக்கு பெயர்களும் பண்டிதர்களுக்கு அவசியம் தெரிந்தவிஷயமே. (22) சுருதி என்பது அனுதியென்று வெகு நூல்களால் வெளிப்பட்டிருக்கிறது வெகு விதவான்களும் அறிந்த விஷயமே. ஆனால் அதிக கடினமில்லாமலே மேற்சொல்லியபடி (12) ஸ்தானத்துனுடைய மார்க்கை நிச்சியம் செய்துகொண்டால் (22) சுருதிகளின் நிலைமை நிச்சியமாக தெரிந்துகொள்ளலாம். அதில் ஸ, ப பாக்கி ஐந்து ஸ்வரங்களுக்கும் ஒவ்வொன்றுக்கு (4) ஸ்வரம் வீதம் (20) ஸ்வரங்களுடன் ஸ, ப இரண்டையும் சேர்த்தால் (22) ஸ்தானம் பாடுகிற மார்க்கத்திற்கு ஏற்படுகிறது. இதைப்பற்றி மகா-ா-ா-ஸ்ரீ ராவ் பஹதூர் நாகோஜிராவ் அவர்களாலும், பி. எஸ். சுந்தரமய்யர் அவர்களாலும், தஞ்சாவூர் பஞ்சாபகேச பாகவதர் அவர்களாலும், பூவனூர் பிரதாப ராமசுவாமி பாகவதர் அவர்களாலும், ஸப்தரிஷி பாகவதர் அவர்களாலும், தஞ்சாவூர் ஸமஸ்கிருத பண்டிதர் S. சுப்பிரமணிய சாஸ்திரிகள் அவர்களாலும் வையை. அப்பாஸாமி அய்யரவர்களாலும், சாமா சாஸ்திரிகளவர்களாலும் பிரசுரிக்கப்பட்டிருக்கிறது. அதுகளை அனுசரித்தே இருக்குமாகையால் அதைப்பற்றி நான் எழுதவேண்டியதில்லை. மேல்படி (பைரவி) ராகத்துக்கு (12) சுருதி (22) சுருதி மார்க்குகளுடன் குறிக்கப்பட்டிருக்கிறது. (5) (22) சுருதிப்படிக்கு (பைரவீ) ராகம் யெனது அனுபவத்திற்கு,

(ஆ) நி ஸ ரீ—க ம ப தா—நி ஸ ரீ
2× 4 2 2 2 2 4
× × ×

(அ) க ரி ஸ நி—த ப ம கா—ரி ஸ நீ
2 4 2 2 2 2 4 ×2

ஸ ம சம்மந்தமாக வெரொரு மார்க்கம்:—

நி ஸ ரி கா
2 4 2
ம ப த நீ
2 2 2
நி த ப மா
2 2 2
க ரி ஸ நீ
2 4 2

} இதை கவனித்தால் மத்தியம் கிரமமாக நிர்ணயமாகிறது.

(12) சுருதிப்படி இந்த ராகத்தில் வரும் சுவரங்களுக்கு பெயர் :—

ஆரோக அவ்ரோக சம்பூர்ண சதுசுருதி ரிஷப சாதாரண காந்தார சுத்த மத்தியம சுத்த தைவத கைசிகி நிஷாத நடபைரவீ 20-வது கர்த்தாவில் ஜன்னியமான (பைரவீ) ராகத்தில் ஆரோகணத்தில் சதுசுருதி தைவத்தை அநேகமாக வைத்தும் பாடுகிறார்கள். ஆனால் ராகம் ருசி மாறுகிறதுமில்லை யென்ன காரணமென்றால் (சதுசுருதி தைவதத்தை) சதுசுருதி ரிஷபத்துக்கு காரணமாக வைத்து சில இடங்களில் (த நி ஸ ரி) (நி த நி ஸ ரி) இம்

மாதிரி குருபாக அமைத்து பாடுகிறார்கள். (த நி ஸ ரி) என்கிற குருபு ஸம்பிரதாயத்துக்கு ஒத்துவராததாக யிருந்தாலும் சதுசுருதி தைவதமானது சதுசுருதி ரிஷபத்துக்கு சற்றேறக் குறைய பஞ்ச ஸரமாகிறபடியால் ராகத்தை கெடுக்கிறதில்லை. ஆனால் பூர்வீகாளுடைய ஸம்பிரதாயத்துக்கு சரியானதல்ல. உதாரணம் மஹா பிரஸித்தமாயுள்ள பைரவி விரிபோநி வர்ணத்தை கவனிக்கும் பட்சத்தில் பல்லவியின் ஆரம்பத்தில் நி ஸ ரி யென்னும், அனுபல்லவியின் ஆரம்பத்தில் ஸ நி த என்றும், சரணத்தில் ம நி த ப த என்றும், மஹா பிரஸித்தாளாயும், ஸ்ரீமன் நாரதர் அவதாரமாயும் ப்ரப்ஹூபூதாளுமான ஸ்ரீ தியாகராஜஸ்வாமி அவர்களின் பைரவி கீர்த்தனங்களுக்குள் முக்கியமாயுள்ள ( காலுவையுன்றடே) என்கிற கீர்த்தனத்தில் ராகநடையை கவனிப்போமாகில் பல்லவியின் ஆரம்பத்திலேயே (நீ த ப தா—நி ஸ ரி ரி ஸ நீ—தா—பா—ம பா ம—பா தா—நி ஸ ரி—க ரி ஸ—ரி ஸ நி ஸ ரி—ஸா க ரி ஸா, ஸ நி த ப, நீ ஸ பா த, ம ப கா ரீ ஸா) என்று பல்லவியில் ஆரம்பித்தும் அனுபல்லவியில் ஆரம்பித்திருக்கிற மார்க்கத்தை பார்த்தால் தேகம் புளகாங்கிதமாகிறது. யாதெனில் பல்லவியில் ஆரம்ப ஸ்வரம் கைசிகி நிஷாதமாகியும் அனுபல்லவியின் ஆரம்பத்தில் அதற்கு ஸம்வாதியாயுள்ள சுத்தமத்தியமம் இந்த மார்க்கத்தை பார்த்தாலோ வாதி ஸம்வாதி அநுவாதியாயுள்ள குருப் ஸ்வரங்களாக ஆகிறதென்று புலப்படுகிறது. யாதெனில் (ம நீ த தா பா—ப ம த ப—ப ம கா ரீ—கா ம ப த—பா தா த ப ப ம—ம ப தா—ப த நி—த நீ த—ப தா ப—ம பா ம) சரணத்தில் இரண்டு பாதத்திலும் அமைத்திருக்கும் சுத்த தைவதத்தின் கௌரவ நாதத்தை கவனித்தால் (தச்ரஹென்யாஸம்) என்று லக்ஷணை கீதக்காரர்கள் ஸித்தாந்தப்படுத்தி யிருப்பதானது அய்யர்வாளுடைய வாக்கு இப்படி அமையப் போகிறதென்று நினைத்து சித்தாந்தப்படுத்தி யிருப்பதாக தோணுகிறது. சதுசுருதி தைவத்தை ஆரோஹணத்தில் (த நி ஸ ரி—நி த நி ஸ ரி) என்று லக்ஷயகானமாக அவர்கள் உபயோகப்படுத்தி வருகிறார்கள். ஆனால் ஸங்கீதம் லக்ஷிய லக்ஷணமும் யுக்தம் ஆகையால் லக்ஷிய கானத்தைப்பற்றி ஜாஸ்தி தோஷமாக யேற்றுக்கொள்ளப்பட்டதல்ல (தச்ரஹன்யாஸம்) என்பது மிகவும் ஸரி (த நி ஸ ரி கா) என்கிற குருப்பிலும் எட்டயபுரம் ஸமஸ்தான வித்துவானாயிருந்த பிரம்மஸ்ரீ சுப்பராம தீக்ஷிதரவர்களால் வெளியிடப்பட்டிருக்கிற ஸங்கீத ஸம்பிரதாய ப்ரதர்சினீ என்கிற கிரந்தத்தில் பைரவி ராகத்தின் சஞ்சார கிரமத்தை கவனிக்குமளவில் சுத்ததைவதம் முக்கியமாக வருமென்றும் (ப த ரீ த நி ஸ) (நி த ரி ஸ) (நீ த நி ஸ) மேல் கண்ட இடங்களில் பஞ்ச சுருதி தைவத பிரயோகமென்றும் மைத்த இடங்களில் வருகிற தைவதம் சுத்த தைவதம் வருமென்றே கண்டிருக்கிறார்கள். ஆகையால் முந்தி என்னுடைய அனுபவத்தில் சித்தாந்தத்தில் சொல்லிய படிக்கே ஒத்து வருகிறது இதை எனது பரிசிரமத்தால் யேர்ப்படுத்தியிருக்கும் 22 சுருதி ஹார்மோனியத்தில் வாசித்து காண்பிக்கும்படி ஸபையோர்களுடைய அபிப்பிராயமிருந்தாலும் அவ்விதம் தெரிந்த வரையில் வாசித்துக்காண்பிக்கிறேன். என்னுடைய குற்றத்தை தள்ளி குணங்களை கண்டு கவுரவப்படுத்தும் சபையோர்களின் அறிவுக்கு வந்தனங்கள் அளிக்கின்றனன்.